குருவே துணை.

# சைவசமயமும், தமிழ்ப்பாடையும்



இஃது

கருப்புக்களர்



## திருவருள், சுப்பைய சுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

திருக்களர்



## மு. சுவாமிநாத உபாத்தியாயன்

எழுதியது

மேற்படி சுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

திருக்கோட்டூர்

## மு. [illegible] தேவர் அவர்களால்



[illegible]ன் [illegible]குடி

[illegible]டத்தில் பதிப்பிக்கப்பட்டது.

கலி-[illegible]) கசுஉக (விருச்சிக ஞாயிறு.

# முகவுரை.

இப்பூவுலகத்தில் விளங்கும் வடகயிலாயமாகிய திருக்கயிலாயமலைமுதல் தென்கயிலாயமாகிய திருக்கோணமலைமுடிவாக எண்ணூறு திருக்கோயில்களுக்கு (தேவார முதலிய திருமுறைகளையும், திருப்புகழையும், திருவுருவங்களையும், கல்வெட்டுகளையும், கன்னபரம்பரைகளையும் ஆதாரமாகக்கொண்டு) இருக்குமிடம், போகுமார்க்கம், சுவாமி யம்மன் பெயர்கள், தீர்த்தங்களின் பெயர்கள், பூசித்தவர்களின் பெயர்கள், திருப்பணிசெய்தவர்களின் பெயர்கள், சிவதருமஞ் செய்தவர்களின் பெயர்கள், (திருவவதாரஞ் செய்தவர்களும், சிவபதம் பெற்றவர்களுமாகிய) திருத்தொண்டர்களின் சரித்திரங்கள், சமயாசிரியர்கள் வந்து போன மார்க்கங்கள், திருமுறை முதலிய பாடல்கள் முதலியவற்றைத் திரட்டி "திருமுறைத்திரட்டு" திருக்கோயிற் காண்டமெனவும்; பரமசிவன் பலதலங்களில் செய்தருளிய திருவிளையாடல்களைக்கூறும் பன்னிரு திருமுறைப் பாடல்களையும், திருப்புகழ்ப் பாடல்களையும், தனித்தனித் திரட்டி, அந்தந்தத் தலங்களில்சேர்த்து "திருமுறைத்திரட்டு" திருவிளையாடற் காண்டமெனவும் பெயர்கொடுத் திருப்பதை வெளிப்படுத்தக்கருதி இப்புத்தகத்தை எழுதி, இதனை வெளிப்படுத்த வேண்டுமென்று சிலரிடத்தில் கேட்டுக்கொண்டேன். அவர்கள் சிறிது பொருளுதவி செய்தார்கள்.* பரமசிவனுக்கு வழிவழி அகம்படித் தொண்டு பூண்டொழுகும் அகம்படியர் மரபில் தோன்றியவரும்; "தாயிற்சிறந்தொரு கோயிலுமில்லை" என்பதை நன்குணர்ந் தொழுகுபவரும்; விநாயகக்கடவுளை வழிபடு கடவுளாகக் கொண்டவரும்; குருபக்தியில் அப்பூதியடிகணாயனாரை ஒப்பவரும்; சிவபக்தியில் அரிவாட்டாய நாயனாரை நிகர்ப்பவரும்; சிவனடியார் பத்தியில் நரசிங்க முனையரைய நாயனாரைப் போன்றவரும் ஆகிய திருக்கோட்டூர் மு. சீனிவாசதேவர் அவர்களிடம் தெரிவித்தேன். அப்புண்ணியசீலர் வேண்டிய பொருளுதவி புரிந்து இப்புத்தகத்தை வெளிப்படுத்தியதை என்றும் மறவேன்.

மு. சுவாமிநாதன்.

# பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௨ | ௧௧ | ளால் | ளால் |
| ௩ | ௰௬ | சேய்து | செய்து |
| ௫ | ௨௨ | அகத்திசர் | அகத்தியர் |
| ௮ | ௰ | சப்பந்த | சம்பந்த |
| ,, | ௰௩ | திருபாடல் | திருப்பாடல் |
| ௰௨ | ௫ | விட்ணு | விட்டுணு |
| ௨௰ | ௩௨ | முடிவாக்கிய | முடிவாகிய |
| ௨௨ | ௨௬ | ஒருவித | ஒருவித |
| ௩௨ | ௰௫ | நாறையூர் | நாரையூர் |
| ,, | ,, | ஓமாப்புலியூர் | ஓமாம்புலியூர் |
| ௩௪ | ௰௭ | யூசிக்க | பூசிக்க |
| ,, | ௨௫ | பூலீச்சரம் | புலீச்சரம் |
| ௩௮ | ௰௧ | கொடிமுடி | கொடுமுடி |
| ௪௧ | ௮ | ஏன்பதை | என்பதை |
| ௪௪ | ௨௬ | முறைபிற் | முறையிற் |
| ௪௭ | ௪ | இருநூற்று | இருநூற்று |
| ,, | ௨௩ | கயிலதேவ | கபிலதேவ |
| ,, | ௨௪ | நம்பியாண்டவர் | நம்பியாண்டார் |





4315

சிவமயம்.

# சைவசமயமும், தமிழ்ப்பாடையும்.

ஆனைமுக னறுமுக னம்பிகைபொ னம்பலவன்
ஞானகுரு வாணியையுண் ணுடு.

கடல்புடைசூழ்ந்த நெடுநில வுலகந்தோன்றிய காலத்தே தோன்றியது — சைவசமயமுந் தமிழ்ப்பாடையும். அவை தோன்றிய பின்னர் எண்ணில்லாத இந்திரர்களும், நூறு கோடி பிரமர்களும், ஆறுகோடி விட்டுணுக்களும் இறந்தார்கள்.

திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்.

நூறுகோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறுகோடி நாராயண ரங்ஙனே
ஏறுகங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறிலாதவ னீச னொருவனே.

தமிழ்ப் பாடை வழங்குநிலம் தமிழ்ப்பூமியென்று சொல்லப்படும். தமிழ்ப்பூமி எப்பூமியினுஞ் சிறந்த நற்பூமியாகிய புண்ணியபூமி. இப்பூமி வடக்கே திருவேங்கடமா மலையையும், கிழக்கு தெற்கு மேற்கு என்னும் மூன்று திக்குகளினும் கடலையும் எல்லைகளாகக்கொண்டது. இலங்கைத்தீவிற் பெரும்பாகம் தமிழ் வழங்கும் நிலமாக இருத்தலினால் தெற்கு எல்லை தூத்துக்குடிப்புறத்துள்ள கடலன்று; இலங்கைத்தீவின் தென்புறமுள்ள கடலென்றுணர்க. மலையாளபாடை தமிழ்ப்பாடையின் திரிபு. சமயகுரவர்கள் காலத்தில் மலைநாடெங்கும் செந்தமிழ்ப் பாடையே வழங்கின. அதனை அந்நாட்டு அரசராகிய சேரமான் பெருமாணாயனார் அருளிச்செய்துள்ள பொன்வண்ணத் தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக்கயிலாய ஞான வுலாவென்னும் ஆதியுலா முதலியவற்றா லுணரலாகும்.

நம் தமிழ்ப்பூமி காய், கனி, கிழங்கு முதலியன நிறையப் பெற்றதாய், இடையிடையே நகரங்களை யுடையதாய், இருடியர் குழாங்கள் தவம்புரிவதற் கேற்றதாய், தண்டகவனமென்று பெயர் பெற்று விளங்கிய காலத்தில் ஒன்பது கோடி சித்தர் களிருந்தார்கள். அவர்களெல்லாருந் தமிழர்களே. அவர்களில் அகத்தியர், போகர், கொங்கணர், தன்வந்திரி, திருமூலர், தட்சிணாமூர்த்தி, நந்திதேவர், பதஞ்சலி, வான்மீகர், புசுண்டர், மட்சமுனி, சட்டைமுனி, இடைக்காடர், கோரக்கர், குதம்பர், பாம்பாட்டி, புலிப்பாணி, இராமதேவர் இவர்களைப் பதினெண் சித்தர்களென்பர். ஒன்பது கோடி சித்தர்களில் அனேகர் இறைவனருளால் நான்மறையின் பொருளைப் பாடலாக அருளிச்செய்தார்கள். அப்பாடல்களில் இக்காலத்துக்கு வேண்டிய சரியை, கிரியை, யோகம், ஞானம், மந்திரம், வயித்தியம், சோசியம், இரசவாதம் முதலிய யாவும் நிறைந்திருக்கின்றன. அக்காலத்திய தமிழ்வழக்கு அறியாத நிர்மூடர்கள் அப்பாடல்களுக்குக் குற்றங்கூறி நரகத்துக் காளாகின்றார்கள்.

பரமசிவன்-சத்தியும் சிவமும் ஒன்றென்பதை விளக்கிக் காட்டும் பொருட்டு அர்த்த நாரீசுரராய்த் தோன்றல்; அரியும் சிவமும் ஒன்றென்பதை உமாதேவியாருக்குக் காட்டும் பொருட்டு சங்கர நாராயணராய்த் தோன்றல்; அகங்காரத்தினால் சண்டையிட்டுக் கொண்ட பிரமவிட்டுணுக்கள் அடிமுடி தேடியும் அறியா வண்ணம் அவர்களின் நடுவில் அக்கினி சொரூபமாய்த்தோன்றல்.; சந்திரனைக் கலைகுறையாவண்ணம் சடையில் தரித்தல்; சூலதேவரை அவர் வேண்டுகோளுக் கிரங்கி கரத்தில் தரித்தல்; அகந்தையடைந்த பிரமாவின் சிரத்தை வயிரவராய்த் தோன்றிக்கிள்ளல்; பத்திசிரோன் மணியாகிய மார்க்கண்டேயரைப் பிடிக்கவந்த இயமனை (சிவலிங்கத் தினின்றெழுந் தருளி) உதைத்துக் கொல்லல்; சலந்தரன் என்னும் அசுரனை (பூமியைக் காற்பெருவிரலினால் வட்டமாகக்கீறி அச்சக்கரத்தினால்) பிளந்து வீழ்த்தல்; அந்தகன் என்னும் அசுரனை சூலத்தால் குத்தி தூக்கி வதைத்தல்; பொன், வெள்ளி, இரும்பு, என்னும் மூவரண்களையுடைய முப்புரத்தை நகைத்தெரித்து தாரகாக்கன்

கமலாக்கன், வித்துன் மாலி என்னும் மூன்ற சுரர்களில் இருவர் திருக்கோயில் வாயில்காக்கும் துவாரபாலகராகவும், ஒருவன் நடனகாலத்தில் குடமுழாவென்னும் வாத்தியம் ஒலிப்பவனாகவும் அருள்புரிதல்; கல்லால மரத்தடியில் தட்சிணாமூர்த்தியாயெழுந்தருளியிருந்து சனகாதிநால்வருக்கு உபதேசித்து யோகத்திலிருந்தபோது தாமரை மலர் என்னும் பாணம் போட்ட காமனை நெற்றிக்கண்ணைத் திறந்தெரித்தல்; வீரபத்திராய்த் தோன்றி (தக்கன் தலையை யறுத்து, யாககுருவாகிய எச்சன் தலையைக்கொய்து, இந்திரனைத் தோள்முறித்து, இயமனைக் கால் முறித்து, அக்கினியைக் கைம்முறித்து, சூரியனைப்பல்லுதிர்த்து, சந்திரனைக் காலால் தேய்த்து, கருடனை வதைத்து) தக்கயாகமழித்தல், (கருமமே மோட்சமெனக்கொண்ட தாருகாவனத்து இருடியர்களுடைய தவத்தை அழிக்கும்பொருட்டு, விட்டுணுவை மோகினி வடிவங்கொண்டுபோக ஆஞ்ஞாபித்து, கணவனே தெய்வமெனக் கொண்ட அவ்விருடியர் மனைவிகளிடம் சூலம், கபாலம், டமருகம், உடையராய், நிர்வாணியாய், பிட்சாடனவடிவங்கொண்டு சென்று, பிச்சைகேட்க; அவ்விருடியர் பத்தினிகள் பிச்சையிடவந்து, பிட்சாடனரைக்கண்டு, மோகங்கொண்டு, கற்பழிந்தார்கள். அதனை அவ்விருடியர்கள் அறிந்து மாரண வேள்விசெய்து, அவ்வேள்வியினின்று தோன்றிய யானை, புலி, ஆண்மான், பெண்மான், முயலகன், ஆயிரம் பாம்பு, மழு, அக்கினி முதலியவற்றை சிவபெருமானைக் கொல்லும் பொருட்டு அனுப்பினார்கள்.) யானையை யுரித்துப் போர்த்துக்கொண்டு தொண்ணூற்றாறு நாழிகைவீரதாண்டவஞ் செய்தருளல்; புலியையுரித்து நல்ல ஆடையென்று இடையில் தரித்தருளல்; ஆண் மானையுரித்து அணிந்தருளல்; முயலகன் முதுகின்மேலேறி நின்று ஆடியருளல்; அக்கினியை இடக்கரத்தில் ஏந்திக்கொண்டு நிர்த்தனஞ் செய்தருளல்; மழுவை வலக்கரத்தில் பிடித்துக்கொண்டு தாண்டவஞ் செய்தருளல்; மானை யிடக்கரத்தில் பிடித்துக் கொள்ளல்; ஆயிரம் பாம்புகளையும் (சிரம், கழுத்து, தோள், மார்பு, இடை, கெண்டைக்கால், புயங்கள், மணிக்கட்டுகள் முதலிய தானங்களில்) ஆபரணமாக அணிந்து கொள்ளல்; சலந்தரனைப் பிளந்த சக்கரத்தை கண்ணைப்பிடுங்கி அருச்சித்தல் செய்த விட்டுணுக்குக் கொடுத்தல்; வேடனாய்ப்

பன்றிப்பின் சென்று அருச்சுனனோடு யுத்தஞ்செய்து அவனுக்குப் பாசுபதங்கொடுத்தல்; விருத்தகுமார பாலராய்த் தோன்றி கௌரிக்கு அனுக்கிரகஞ்செய்தல்; உபமன்னியருக்குப் பாற்கடலை வரவழைத்துக் கொடுத்தல்; மாமனாகவந்து வழக்குரைத்தல்; கல்லானைக்குக் கரும்பருத்தல்; உலவாக்கிழி கொடுத்தல்; உலவாக்கோட்டை கொடுத்தல்; பொற்கிழி கொடுத்தல்; சங்கப்பலகை கொடுத்தல்; திருமுகங் கொடுத்தல்; இரத்தின வியாபாரியாய் மாணிக்கம் விற்றல்; வளையற்காரனாய் வளையல் விற்றல்; விறகுக்காரனாய் பாணபத்திர னடிமையென்று சாதாரிபாடல்; மாயப் பசுவை வதைத்தல்; நாகமெய்தல்; யானையெய்தல்; நக்கீரருக்கு உபதேசித்தல்; ஆன்மநாதராய் வாதவூராருக் குபதேசித்தல்; நரியைப் பரியாக்கிக் கொடுத்தல்; பரியை நரியாக்கி விடுத்தல்; (மண்ணோட்டனாய்ச்சென்று, வந்தியென்பவள் கொடுத்த பிட்டையுண்டு அவளுக்குக் கூலியாளென்று கணக்கில் பதிவுசெய்து) வைகையடைக்க மண்ணைச்சுமந்து பிரம்படிபடல்; பொன்னனையாளுக்கு இரசவாதஞ்செய்து கொடுத்தல்; திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்கு பொற்றாளம், முத்துச்சின்னம், முத்துக்குடை, முத்துப் பல்லக்கு, முத்துப் பந்தல், பொற்கிழி, படிக்காசு கொடுத்தல்; திருநாவுக்கரசு நாயனாருக்கு சூலைநோய் நீக்கி, கருங்கல்லைத் தெப்பமாக்கி, படிக்காசும் கைலாய தரிசனமும் கொடுத்தல்; சுந்தரமூர்த்தி நாயனாரைத் தடுத்தாட்கொண்டு, அவருக்குத் தூதுசென்று, செங்கல்லைப் பொன்னாக்கிக் கொடுத்தல்; அகத்திய முனிவருக்கு தலங்கள் தோறும் திருமணக்கோல தரிசனங்கொடுத்தல், வீடுகள் தோறும் பிச்சை யேற்றல் தக்கனுக்குப்புத்திரியாயும், பருவத ராசனுக்குப் புத்திரியாயும், மலையத்துவச பாண்டியனுக்குப் புத்திரியாயும், திருவவதாரங்கள் செய்திருந்த, உமாதேவியாரை திருக்கல்யாணங்கள் செய்து கொள்ளுதல்; சௌந்தர பாண்டியனாய் அரசு புரிந்திருத்தல்; விட்டுணுக்குச் சங்கு கொடுத்தல்; சிலந்தி அரசனாய்த் தோன்றவருள் செய்தல்; எலி அரசனாய்ச் செனிக்க வருள் செய்தல்; வேடன் அரசனாய்ப் பிறக்க வருள் புரிதல்; ஆனந்த தாண்டவஞ்செய்தருளல்; சந்தியா தாண்டவஞ்செய்தருளல்; இலக்குமிதாண்டவஞ் செய்தருளல்; கௌரிதாண்டவஞ் செய்

தருளல்; காளிதாண்டவஞ் செய்தருளல்; முனிதாண்டவஞ் செய்தருளல்; சங்காரதாண்டவஞ் செய்தருளல்; வீதி விடங்கத் தியாகராய் அசபா நடனஞ் செய்தல்; நகவிடங்கத் தியாகராய் உன்மத்த நடனஞ்செய்தல்; சுந்தர விடங்கத் தியாகராய் பாராவாரதரங்க நடனஞ் செய்தல்; புவனிவிடங்கத் தியாகராய் அம்ச நடனஞ் செய்தல்; நீலவிடங்கத் தியாகராய் கமல நடனஞ் செய்தல்; அவனி விடங்கத் தியாகராய் வண்டு நடனஞ் செய்தல்; ஆதிவிடங்கத் தியாகராய் குக்குட நடனஞ் செய்தல்; முதலிய எண்ணில்லாத திரு விளையாடல்கள் செய்தருளிய தலங்களும்; உமாதேவியார் தக்க புத்திரியாயும், பருவதராச புத்திரியாயும், பாண்டியராச புத்திரியாயும், காளியாயும், துர்க்கையாயும், காடுகாளாயும்தோன்றித் தவம்புரிதல். செய்தருளிய தலங்களும்; பிறந்தோர், நினைத்தோர், தரிசித்தோர்களுக்கு சிவபதங்கொடுக்கும் தலங்களும்; மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, துவாதசாந்தம் என்னும் தலங்களும்; பொற்சபை, வெள்ளிச்சபை, செப்புச்சபை, இரத்தினசபை, சித்திர சபைத் தலங்களும்; விநாயகர், பிரமன், விட்டுணு, உருத்திரன், நந்திதேவர், வீரபத்திரர், வயிரவர், சுப்பிரமணியர், இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், சந்திரன், சூரியன், பார்வதி, இலக்குமி, சரசுவதி, இந்திராணி,* காளி, துர்க்கை, அரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை, காமதேனு, ஐராவதம், ஆதிசேடன், அகத்தியர், கொங்கணர், இராமர், அருச்சுனன், வாலி, சுக்கிரீபன், அநுமார், சண்டேசுர நாயனார், திருமூல நாயனார், கருடன், கழுகு, நாரை, மயில், அன்னம், காகம், தேனீ, பசு, யானை, அணில், சிலந்தி, எறும்பு முதலியன பூசித்ததலங்களும்; அறுபத்து மூன்று நாயன்மார்கள்; மாணிக்கவாசக சுவாமிகள், பட்டினத்தடிகள், பத்திரகிரியார், சேந்தனார் திருமாளிகைத் தேவர், வேணாட்டடிகள், புருடோத்தம நம்பி, நம்பி காடநம்பி, திருவாலியமுதனார், கண்டராதித்தர், கருவூர்த் தேவர், சேதிராயர், கண்ணுடைய வள்ளல், சிவஞான வள்ளல், ஔவையார், திருவள்ளுவர், அரதத்த சிவாசாரியர், அருணகிரிநாதர், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் நாயனார், மெய்கண்டதேவ நாயனார், உமாபதி சிவாசாரியர், மறைஞான சம்பந்த

சிவாசாரியர், அருணந்தி சிவாசாரியர், மனவாசகங் கடந்தார், திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார், திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார் முதலிய திருத்தொண்டர்கள் திருவவதாரஞ் செய்து சிவபதம் பெற்ற தலங்களும். ஆகிய பல்லாயிரங்கோடி சிவதலங்கள் நம்முடைய தமிழ்ப்பூமியில் விளங்குவதால் இப் பூமிக்கு எப்பூமியும் ஒப்பும் உயர்வும் உடையதன்றென்பது திண்ணமே.

பௌத்த, சமண சமயங்கள் தோன்றி நம்முடைய சைவ சமயத்துக்கு இடர்செய்த காலத்தில், மாணிக்கவாசக சுவாமிகள், திருநாவுக்கரசு நாயனார், திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், என்னும் சமயாசிரியர்கள் முறையே தோன்றி திருநான் மறைகளைத் தமிழில் அருளிச்செய்து, மாணிக்கவாசக சுவாமிகள (புத்தராசனுடைய குமாரத்தியாகிய ஊமைப்பெண்ணை பேசுவித்து) புத்தரை வாதில் வென்றும்; திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் சமணர்களை வாதில் நீரிலும் நெருப்பிலும் வென்று கழுவேற்றியும், (தமிழ்மறைலேககர் "புத்தர் சமண்கழுக்கையர் பொய்கோளாச்,— சித்தத்தவர்கடேளிந்து தேறின,—வித்தக நீறணிவார் வினைப்பகைக்,—கத்திர மாவனவஞ் செழுத்துமே" என்னுந் திருப்பாட்டை ஓதி இடியிடித்து புத்தனுடைய சிரம் உருண்டுவிழக்கடவது என்று சொல்லியருளினார். உடனே இடியிடித்து புத்தனந்தியுடைய தலையையும் சரீரத்தையும் வேறாகக் கூறுபடுத்தியது.) புத்தர்களை வாதில் வென்றும் சைவ சமயத்தை நிலை நிறுத்தினார்கள்.

மாணிக்கவாசக சுவாமிகள் காலம், பொய்யடிமை இல்லாத புலவர்கள் காலமாகிய துவாபரயுகத்தின் இறுதிநூற்றாண்டு. திருநாவுக்கரசு நாயனார்காலம் மாணிக்கவாசக சுவாமிகள் காலத்துக்குப் பிற்பட்ட காலமாகிய துவாபரயுகத்தின் இறுதிநூற்றாண்டின் இறுதியும் கலியுகத்து முதலாம் நூற்றாண்டின் முற்பாதியுமாகிய காலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் காலம் கலியுகத்து முதலும் திருநாவுக்கரசு நாயனார்காலத்தின் இடையுமாகியகாலம். சுந்தரமூர்த்தி நாயனார்காலம் கலியுகத்து முதலாம் நூற்றாண்டின் பிற்பாதி.

திருமூல நாயனார். சண்டேசுர நாயனார், கோச்செங்கட் சோழ நாயனார், கண்ணப்ப நாயனார், மூர்த்தி நாயனார், கணம்புல்ல நாயனார், அமர்நீதி நாயனார், நமிநந்தியடிகணாயனார், தண்டியடிகணாயனார், புகழ்த்துணை நாயனார், புகழ்ச்சோழ நாயனார் எறிபத்த நாயனார், கழற்சிங்க நாயனார், செருத்துணை நாயனார், திருநீலகண்ட நாயனார், இயற்பகை நாயனார், இளையான்குடி மாற நாயனார், ஏனாதிநாத நாயனார், அரிவாட்டாய நாயனார், ஆனாய நாயனார், உருத்திர பசுபதி நாயனார், திருநாளைப்போவார் நாயனார், திருக்குறிப்புத்தொண்ட நாயனார், காரைக்காலம்மையார், மூர்க்க நாயனார், சாக்கிய நாயனார், கூற்றுவ நாயனார், அதிபத்த நாயனார், கலிக்கம்ப நாயனார், கலிய நாயனார், சத்தி நாயனார், காரி நாயனார், ஐயடிகள் காடவர்கோனாயனார், பூசலார் நாயனார், வாயிலார் நாயனார், முனையடுவார் நாயனார், இடங்கழி நாயனார், நேச நாயனார், சிறப்புலி நாயனார், இவர்கள் காலம் திருநாவுக்கரசு நாயனார், காலத்துக்கு முற்பட்ட காலம்.

குங்குலியக்கலய நாயனார், முருக நாயனார், குலச்சிறை நாயனார், நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், திருநீலநக்க நாயனார், சிறுத்தொண்ட நாயனார், அப்பூதியடிகணாயனார், இவர்கள் காலமும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் காலமும் சமகாலம்.

கணநாத நாயனார் காலம் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் காலத்துக்கும் சுந்தரமூர்த்தி நாயனார் காலத்துக்கும் மத்தியகாலம். பாணபத்திரர் என்னும் திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார் காலம் பொய்யடிமையில்லாத புலவர்கள் காலமுதல் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் காலம் வரையுமாகியகாலம் கழறிற்றறிவார் என்னும் சேரமான் பெருமாணாயனார் ஔவைப்பிராட்டியார் இவர்கள் காலம் பொய்யடிமையில்லாத புலவர்கள் காலமுதல் சுந்தரமூர்த்தி நாயனார் காலமுடியவுமாகிய காலம்.

சடைய நாயனார், இசைஞானியார், நரசிங்கமுனையரைய நாயனார், மெய்ப்பொருணாயனார், விறன்மிண்ட நாயனார், கோட்

*புலி நாயனார், சேரமான்பெருமாள் நாயனார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், மானக்கஞ்சாற நாயனார், பெருமிழலைக்குறும்ப நாயனார், இவர்கள்காலமும் சுந்தரமூர்த்தி நாயனார் காலமும் சமகாலம்.*

*பட்டினத்தடிகள், சேந்தனார், பத்திரகிரியார், அருணகிரிநாதர் இவர்கள் காலமும், நரசிங்கமுனையரைய நாயனாருடைய இரண்டாவது குமாரனாகிய (வரபதி) ஆட்கொண்டான் என்னும் அரசன் காலமும் சமகாலம். நம்பியாண்டார் நம்பி காலம் கலியுகத்து மூன்றும் நூற்றாண்டு.*

சமயாசிரியர்களில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிய திருமறைத் தமிழ்த்தேவாரத் திருப்பாடல்கள் (பதினாறாயிரம்) ௧௬000. திருநாவுக்கரசு நாயனார் திருவாய் மலர்ந்தருளிய திருமறைத் தமிழ்த் தேவாரத் திருபாடல்கள் (நாற்பத்தொன்பதினாயிரம்) ௪௯000. சுந்தரமூர்த்தி நாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருமறைத் தமிழ்த் தேவாரத் திருப்பாடல்கள் (முப்பத்தெண்ணாயிரம்) ௩௮000. ஆகத்திருமறைத் தேவாரத் திருப்பாடல்கள் (நூற்றுமூவாயிரம்) ௧0௩000.

அபயகுல சேகர சோழ மகாராசா வேண்டுகோளுக்கிணங்கி திருநாரையூர் பொல்லாப் பிள்ளையார் மாணாக்கராகிய நம்பியாண்டார் நம்பியென்பவர் திருத்தில்லைத் திருச்சிற்றம்பலத்துக்கு மேற்றிசையில் மூவர் கையடையாளமிட்டிருந்த அறையினுள்ளே மேலே திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அருளிச்செய்த திருப்பாடல்களும், அதன் கீழ் திருநாவுக்கரசுநாயனார் அருளிச்செய்த திருப்பாடல்களும், அதன் கீழ் சுந்தரமூர்த்திநாயனார் அருளிச்செய்த திருப்பாடல்களும் வைக்கப்பெற்று புற்று மூடப்பெற்றிருந்ததில் எள் நெய்க்குடங்களை பெய்து கண்டுபிடித்தது திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருப்பாடல்கள் (நாலாயிரத்து நூற்று நாற்பத்தேழு) *௪௧௪௭.* திருநாவுக்கரசு நாயனார் திருப்பாடல்கள் (மூவாயிரத்து அறுபத்தாறு) ௩0௬௬. சுந்தரமூர்த்தி நாயனார் திருப்பாடல்கள் (ஆயிரத்து இருபத்தாறு) ௧0௨௬. கலி ஐயாயிரத்துப் பதினெட்டில் திருக்களர் மு. சுவாமிநாத உபாத்தியாயரால் திருவிடைவாய்க்குடி கோவில் கல்வெட்டிலிருந்து

கண்டுபிடித்தது திருஞானசம்பந்தமூர்த்திநாயனூர் திருப்பாடல்கள் (பதினொன்று) ௧௧. சுவாமிநாதபண்டிதரால் அச்சியற்றிய அடங்கன்முறையினிறுதியில் உள்ளது திருஞானசம்பந்தமூர்த்தி நாயனூர் (வெள்ளி) பாடல்கள் (பதினொன்று) ௧௧. திருநாவுக்கரசுநாயனூர் பொதுப்பாடல் (ஒன்று) ௧. ஆகத் திருப்பாடல்கள் (எண்ணுயிரத்து இருநூற்று அறுபத்திரண்டு) ௮௨௬௨.

பட்டினத்தடிகள் குமாரரும், சமயகுரவர்கள் காலத்துக்குப்பிற்பட்டவரும், நரசிங்கமுனையரைய நாயனூருடைய இரண்டாவது குமாரனுகிய (வரபதி) ஆட்கொண்டான் என்னும் அரசன் கொங்கு தேயத்தையும் பிரபுடதேவராயன் என்னும் அரசன் திருவண்ணுமலையையும் ஆண்டிருந்த காலத்திலிருந்தவரும், சுப்பிரமணியக் கடவுள் வரப்பிரசாதியுமாகிய அருணகிரிநாதர் சுப்பிரமணியக்கடவுள் பேரில் திருவாய் மலர்ந்தருளிய திருப்புகழ்த் திருப்பாடல்கள் (பதினுறுயிரம்) ௧௬௦௦௦. அவற்றுள் இப்போதுவெளிவந்துள்ள பாடல்கள் (ஆயிரத்து இருநூற்று நாற்பத்தோன்பது) ௧௨௪௯.

*ஆதிகாலத்தில் இத்தேயத்தில் ஆரியர்களே இல்லை. பிரம, சத்திரிய, வைசிய, சூத்திரர்என்னும் சாதிப்பிரிவுகளுமில்லை. அவைதமிழ்த்தேயத்துக்கு ஏற்பட்டவையுமல்ல. நம் தமிழ்த்தேயத்தில் வேளாளர், கள்ளர், மறவர், அகம்படியர், பரதவர், பள்ளியர், அம்பலவர், சாலியர், கம்மியர், குயவர், சான்றூர், செக்கார், வல்லம்பர், வண்ணூர், நாவிதர், ஓச்சர், பாணர், மள்ளர். என்னும் பதினெட்டு சாதிகளிருந்தன. இவர்களைப்பற்றி மள்ளர் கடையாக பதினெட்டுச்சாதிகளென்று ஒரு பழமொழி வழங்குவதுமுண்டு, கள்ளர், மறவர், அகம்படியர், பரதவர் என்னும் நான்கு சாதியாருக்கும் தேவவம்மிசமானதால் தேவர் என்னும் பட்டமுண்டு. இடைக்காடர் என்னும் சித்தர் வம்மிசம் இடையர். வீரபாகுதேவர் முதலிய ஒன்பது வீரர்களுடைய வம்மிசம் செங்குந்தர். நரசிங்கமுனையரைய நாயனூருடைய வம்மிசம் மலையமான் என்னும் உடையர். மெய்ப்பொருள் நாயனூருடைய வம்மிசம் நத்தமான் என்னும் உடையர். குலசேகரருடைய வம்மிசம் சுருதிமான் என்னும் மூப்பர். பரதவர்கள் காவிரிப்பூம் புகார்ப்பட்டினம், நாகபட்டினம் முதலிய*

துறைமுகப்பட்டினங்களில் இருந்தகாரணத்தினால் பட்டினவர் என்னும் பட்டப்பெயர்பெற்று தீவாந்திரங்களுக்கு கப்பலில் பலவகைச்சரக்குகள் கொண்டுபோய் செட்டுத்தொழில் செய்து வந்த காரணத்தினால் செட்டியர் என்னும் பட்டம்பெற்று பல பிரிவாயினார்கள். செக்கார் என்போர் உள்நாடுகளில் பலவித செட்டுத்தொழில்கள் செய்தகாரணத்தினால் செட்டியர் என்னும் பட்டம்பெற்று வெவ்வேறு பிரிவாயினார்கள். வேளாளரில் சித்தக்காட்டார், சோழபுரத்தார் என்போர் செட்டுத்தொழில்கள் செய்தகாரணத்தினால் வேளாளசெட்டியர் என்னும் பட்டம்பெற்று வெள்ளாஞ்செட்டியர் என்று வழங்கப்பெறுவாராயினார். அகம்படியரில் சிலரும், வல்லம்பரில் சிலரும், அம்பலவரில் சிலரும் செட்டுத்தொழில் செய்தகாரணத்தினால் செட்டியர் என்னும் பட்டமும் பெற்றார்கள். வேளாளரில் ஒருவகுப்பார் உக்கிரகுமார பாண்டியனிடத்தில் மேகத்துக்கு சாமீன் கொடுத்தகாரணத்தினால் கார்காத்தார் (காரைக்காட்டார்) என்னும் பட்டமும், வேளாளரில் மற்றொருவகுப்பார் தொண்டைமான் சக்கரவர்த்தியிடத்தில் ஆடையோடு பாலாற்றைக்கடந்த காரணத்தினால் முதன்மையார் (முதலியார்) என்னும் பட்டமும், செங்குந்தர் குலோத்துங்கசோழனிடத்தில் ஒட்டக்கூத்தர் மூலமாய் முதன்மையார் (முதலியார்) என்னும் பட்டமும் பெற்றார்கள். அபயகுலசேகரசோழ மகாராசா பதினொரு திருமுறைகளையும் செப்பேடுசெய்து தியாகேசர் சன்னிதியில் ஏற்றுவித்த காலத்தில் அச்செப்பேட்டுக்கு ஓலைப்பிரதிஒன்று தயார்செய்து, அதனை வேளாளரில் ஒரு வகுப்பாரிடம் ஒப்புவித்து, அவர்களுக்கு தேவாரப்பொக்கிடம் என்னும் அருத்தந்தரக்கூடிய "பண்டாரம்" என்னும் பட்டத்தைக்கொடுத்து திருக்கோயில்களில் ஓதச்செய்தார். இக்காரணத்தினால் அவர்களுக்கு திருமறையோதுவார் என்று ஒருபட்டமும் உண்டாயிற்று. இதனை அவர்கள் அறியாது தங்களைப்பண்டாரம் அல்லது ஓதுவார் என்று சொல்லுவதற்கு பெருத்தவெட்கமுந்துக்கமும் அடைகின்றார்கள். ஒவ்வொரு சாதியும் நாளடைவிலே தேசப்பெயர், நகரப்பெயர், நாட்டுப்பெயர், ஊர்ப்பெயர், தொழிற்பெயர், என்பவற்றைக்கொண்டு வெவ்வேறாய்ப்பிரிந்து பலபல சாதிகளாயின.

இச்சாதியர்களைத்தான் தமிழர்களென்று சொல்லப்படும். இவர்கள் எல்லாரும் ஆதியில் மாமிசாதிகள் புசித்தலைக்கைக்கொண்டிருந்தார்கள். முதன் முதல் வேளாளரிற் பெரும்பாலாரும் அதன்பின் அகம்படியரிற் சிலரும் அதன்பின் கள்ளரிற் சிலரும் அதன்பிறகு பள்ளியரிற் சிலரும் மாமிசாதி புசித்தலை ஒழித்து சீவகாருணியத்தைக்கைக்கொண்டார்கள்.

சிவசமயம்-சைவம், பாசுபதம், மாவிரதம், வைரவம், காளாமுகம், வாமம் என்னும் ஆறு உட்பிரிவையுடையது. சிவலிங்கப்பெருமான், சபாநாயகப்பெருமான், சந்திரசேகரப்பெருமான், சோமசுந்தரப்பெருமான், தியாகேசப்பெருமான், தக்கிணாமூர்த்தி, பிச்சாடனர்முதலிய சிவதிருவுருவங்களை வழிபடுவது சைவசமயம். விநாயகக்கடவுளை வழிபடுவது பாசுபதசமயம், சுப்பிரமணியக்கடவுளை வழிபடுவது மாவிரதசமயம். வைரவக்கடவுளை வழிபடுவது வைரவசமயம். வீரபத்திரக்கடவுளை வழிபடுவது காளாமுகசமயம். தேவியார் திருவுருவங்களை வழிபடுவது வாமசமயம். இவையாவும் ஒரேகாலத்தில் உண்டாகவில்லை. ஆதியில் சைவசமயமும்; விநாயகக்கடவுள் சிந்தூரன் என்னும் அசுரனைக்கொல்லும்பொருட்டு யானைமுகத்தோடு திருவவதாரஞ்செய்தகாலத்தில் பாசுபதசமயமும்; சுப்பிரமணியக்கடவுள் சூரபன்மாதியரைக்கொல்லும் பொருட்டு, ஆறுமுகம் பன்னிரண்டுகைகளோடு, திருவவதாரஞ்செய்தகாலத்தில் கௌமாரம் என்னும் மாவிரதசமயமும்; வைரவக்கடவுள் பிரமதேவருடைய ஐந்தாவது சிரத்தைக்கிள்ளும்பொருட்டு, தோன்றியகாலத்தில் வைரவசமயமும்; வீரபத்திரக்கடவுள் தக்கன்யாகத்தை அழிக்கும்பொருட்டு, தோன்றியகாலத்தில் காளாமுகசமயமும்; உமாதேவியார் பரமசிவனைப்பிரிந்து, தக்கனுக்குப்புத்திரியாய்த்திருவவதாரஞ்செய்தகாலத்தில் வாமசமயமும் உண்டாயின. இவ்வாறுசமயமும் ஒன்றாய்த்திருக்கோயில் கொண்டு விளங்குவதால் அகச்சமயம் என்னும் உட்சமயம் ஆறென்பர். முற்காலத்தில் இவ்வாறுசமயதேவதைகளைத்தவிர வேறுதேவதைகளை வழிபடும் வழக்கம்இல்லை. இதனைப்பல்லாயிரங்கோடி சிவதலங்கள் நம் தமிழ்த்தேயத்திலிருத்தலினால் நன்குணரலாகும். மாடன், கருப்பன், வீரன், காத்தன், முனியன், காத்

கையன், பட்டவன், முன்னடியன், பேச்சி, காட்டேறி முதலிய பேய்த்தெய்வங்கள் அக்காலத்தில்இல்லை. அவற்றை வழிபடு மார்க்கமுந்தெரியாது. காமன் பண்டிகை கொண்டாடும் வழக்கமுமில்லை.

மறைநான்கின் சொரூபமே, பிரமவிட்டுணுக்கள் அடிமுடி தேடியறியாத சிவசொரூபம். மறைநான்கின் ஆதியும் அந்தமும் எப்பாடையும் அறியாதகாரணத்தினால் அவற்றிற்கு எழுதாக்கிளவி என்னும் பெயருண்டாயிற்று. மறை, ஞானம், கடவுள், இம்மூன்றும் எப்பாடைக்கும், எம்மதத்திற்கும்பொது. மறையினால் ஞானத்தையும், ஞானத்தினால் கடவுளையும் அடையவேண்டியிருத்தலினால் ஒருபாடையிலேனும், ஒருமதத்திலேனும் மறைஇல்லையென்றுசொல்ல எவர்களாலுமுடியாது. கடவுளுடைய திருவாக்கினின்றும் அவருடைய திருவருள்பெற்ற திருத்தொண்டர்களின் திருவாக்கினின்றும் உதிக்கும் வாக்கியமே மறையென்று சொல்லப்படும். ஆதியில் பரமசிவன், சுப்பிரமணியர், அகத்தியர், தன்வந்திரி, போகர், கொங்கணர், புலிப்பாணி, மட்சமுனி, சட்டைமுனி, நந்திதேவர், தட்சிணாமூர்த்தி, திருமூலர், புசுண்டர், பதஞ்சலி, கோரக்கர், குதம்பர், அகப்பேயர், பாம்பாட்டி, இராமதேவர், கடுவெளிச்சித்தர், அழுகணிச்சித்தர், சிவவாக்கியர், இடைக்காடர், வால்மீகர், திருமாளிகைத்தேவர், கருவூர்த்தேவர் முதலிய சித்தர்களின் திருவாக்கினின்றும்; பின்னர் திருவாலவாயுடையார், மாணிக்கவாசக சுவாமிகள், திருநாவுக்கரசுநாயனார், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், சுந்தரமூர்த்திநாயனார், சேரமான் பெருமாணாயனார், ஐயடிகள் காடவர்கோனாயனார், காரைக்காலம்மையார், நக்கீரதேவநாயனார், கபிலதேவநாயனார், பரணதேவநாயனார், கல்லாடதேவநாயனார், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், பட்டினத்தடிகள், பத்திரகிரியார், திருவள்ளுவநாயனார், ஔவைப்பிராட்டியார், சேந்தனார், நம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் நாயனார், சிவஞான வள்ளல், கண்ணுடைய வள்ளல், அருணகிரிநாதர் முதலிய திருத்தொண்டர்களின் திருவாக்கினின்றும்; அதன் பின்னர் மெய்கண்ட

தேவ நாயனார், அருணந்தி சிவாசாரியர், மறைஞானசம்பந்த சிவாசாரியர், உமாபதி சிவாசாரியர், மனவாசகங்கடந்தார், உய்யவந்ததேவ நாயனார், சாந்தலிங்க சுவாமிகள், குகை நமச்சிவாய சுவாமிகள், குருநமச்சிவாய சுவாமிகள், குமரகுருபர சுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகள், தாயுமான சுவாமிகள், இராமலிங்கசுவாமிகள், தண்டபாணி சுவாமிகள் முதலிய திருத்தொண்டர்களின் திருவாக்கினின்றும் நான்மறைப்பொருள்கள் தோன்றின. அவற்றில் சரியை, கிரியை, யோகம், ஞானம், வயித்தியம், சோதியம், மந்திரம், வாதம் முதலிய எல்லாம் நிறைந்திருக்கின்றன. அவற்றை இறைவனருள்பெற்ற ஞானாசிரியர் முன்பு கேட்டறிதல்வேண்டும். இதனையறியாத முழுமூடர்கள் தமிழ்ப்பாஷையில் நான்மறைகள் இல்லையென்றும்; சித்தர்கள் அருளிச்செய்தவைகளைப் பிரயோசனமல்லாதவைகளென்றும்; தேவாரமுதலிய பன்னிருதிருமுறைகளைக்குப்பைகளென்றும்; திருப்புகழ்ப்பாடல்களைச் சிற்றின்பப்பாடல்களென்றும்; ஒழிவிலொடுக்கம், சிவஞானவள்ளல், கொலைமறுத்தல், வைராக்கியசதகம், வைராக்கியதீபம், மெய்கண்டசாத்திரம் பதினான்கு முதலியவைகளைச்சித்தாந்தமென்றும், தமிழ்ஞானிகளை சித்தாந்திகளென்றும் கண்டவாறு பிதற்றுகின்றார்கள். அகச்சமயத்திலே, தமிழ்ப்பூமியிலே, தமிழர் மரபிலே பிறந்து வளர்ந்து, தமிழ்ப்பாஷை சிறிதுபயின்று, புறச்சமயத்திலே புகுந்து, தமிழ் மறையையும் சைவசமயத்தையும் நிந்திப்போர் அன்னைதந்தையரை நிந்திக்கும் அரும்பாவிகளேயாவர். அவர்களடைவது மீளாநரகமேயாகும்.

பிரமசிரங்கொய்தல், சலந்தரனைப்பிளத்தல், யானையுரித்தல், இயமனையுதைத்தல், அந்தகனைவதைத்தல், தக்கயாகமழித்தல், காமனைவிழித்தல், திரிபுரத்தை நகைத்தல், இவையெட்டும் முறையேநடந்தன. இறுதியாகச்சொல்லப்படும் திரிபுரதகனம் நடந்தபின்னர் எண்ணில்லாத இந்திரர்களும், அநேகம் பிரமர்களும், பலவிட்டுணுக்களும் இறந்தார்கள்.

## திருவாசகம்.

"எண்ணுடை மூவரிராக்கதர்களெரி பிழைத்துக்
கண்ணுத லெந்தை கடைத்தலை முனின்றதற்பி
னெண்ணிலியிந்திர ரெத்தனையோ பிரமர்களு
மண்மிசை மால்பலர் மாண்டனர் காண்டோனேக்கம்."

சிவன்கோவில் என்பது ஆன்மாக்களுக்கு உலக நடிப்பை விளக்கிக்காட்டி, பத்தியை விளைவித்து, முத்தியைக்கொடுக்குந் தானம். அக்கோவிலுள் ஆறு அகச்சமயதேவதைகளும், அத்தேவதைகளை வழிபட்டு சிவபதம்பெற்ற திருத்தொண்டர்களும், அத்தொண்டர்களுக்கு எதிரே தோன்றி அனுக்கிரகஞ்செய்த சிவதிருவுருவங்களும் இருக்கின்றன. நாள்தோறும் அன்போடு தரிசிப்போருக்கு உலகஞ்சத்தி சிவமயமென்பதும்; அச்சத்தி சிவம் இருவரும் சர்வ ஆன்மாக்களுக்கும் அன்னை தந்தையரென்பதும்; அவ்வன்னை தந்தையர் இவ்வுலகத்தில் போகத்தையும் அவ்வுலகத்தில் தம்பதத்தையும் கொடுப்பர் என்பதும் நன்கு விளங்கும். மீன்களையிட்டு மீன்களையும், பறவைகளைவைத்துப் பறவைகளையும், மிருகங்களைவிட்டு மிருகங்களையும் பிடிப்பதுபோல் பரமசிவன் நான்கு திருக்கரங்களோடு மனிதவடிவங்கொண்டு தோன்றி, மனிதர்களைத்தடுத்தாட்கொண்ட திருவுருவங்கள் விளங்குந்தானம் சிவன்கோவிலானதால் நாள்தோறும் அங்குசென்று அவ்வுருவங்களை விதிப்படி தரிசிப்போர் இவ்வுலகத்தில் புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் என்னும் பதினாறும்பெற்று முடிவில் சிவசொரூபத்தை அடைந்து அறுபத்துமூவராதியர்களைப்போல் சிவன்கோவில்களில் திருவுருக்கொண்டு விளங்குவர். மனசு காற்றின் அமிசமானதால் அக்காற்றைப்போல் அசைந்துகொண்டே இருக்கும்; ஒரு விநாடி நேரமேனும் அசைவின்றி நிற்காது. நாள்தோறும் சிவன்கோவிலுக்குப்போய் சிவதிருவுருவங்களை உற்றுநோக்குவோருக்கு "அக்கினிப்பந்தலில் வெண்ணெய்ப்பதுமை கூத்தாடாவாறுபோல" அசைவொழிந்து தம்வசப்படும். அறுபத்து

மூவர் முதலிய திருத்தொண்டர்களுடைய திருவுருவங்கள் சிவன்கோவில்களில் பூசிக்கப்பெறுதலின் காரணத்தைக்கவனிப்போர் மனசில் சிவனடியார்களையும் சிவபெருமானையும் வழிபடுந்தோற்றமுண்டாகி, அத்தோற்றவாயிலாய் சிவபெருமானையும் சிவனடியார்களையும் வழிபட்டு, முடிவில் சிவபதம்பெற்று பூசிக்கப்பெறுவர். கோபுரம் புலப்படும்போது சிவத்தியான முண்டாகிறது. அதிர்வெடிச்சத்தம் சிவத்தியானத்தைக்கொடுத்து திருவிழாத்தரிசனத்துக்குக் கூப்பிடுகிறது. தெண்டாமணிச்சத்தம் சிவத்தியானத்தைக்கொடுத்து பூசாகாலதரிசனத்துக்குக் கூப்பிடுகிறது. வாத்திய ஒலி சிவத்தியானத்தைக் கொடுத்து சிவசொரூப தரிசனத்துக்குக் கூப்பிடுகிறது. சித்திரங்கள் சிவதிருவிளையாடல்களைப் போதிக்கின்றன. இத்தகைய பேரானந்தம் எச்சமயக்கோவில்களிலும் இல்லை.

பொன்முகலிநதி, நீவாநதி, குசத்தலைநதி, பழையபாலிநதி, பாலிநதி, வேகவதிநதி, சேய்நதி, சங்கராபரணிநதி, பம்பைநதி, பெண்ணைநதி, கெடிலநதி, கோமுகநதி, மணிமுத்தாநதி, நிவாநதி, கொள்ளிடநதி, மண்ணிநதி, விநாயகநதி, புறவநதி, கழுமலநதி, காவிரிநதி, வீரசோழநதி, வாஞ்சிநதி, அரிசொல்நதி, திருமலைராசநதி, முடிகொண்டாநதி, வளப்பநதி, குடமுருட்டிநதி, கபிலநதி, கடுக்கைநதி, பாண்டவாய்நதி, முனிவாய்நதி, வெண்ணிநதி, வள்ளல்நதி, சந்திரநதி, அரிச்சந்திரநதி, வளவநதி, பாமணிநதி, கோரநதி, ஆமிராவதிநதி, நொய்யல்நதி, பவானிநதி, காஞ்சிவாய்நதி, சண்முகநதி, பற்குனநதி, சர்ப்பநதி, வெள்ளநதி, அம்மணிநதி, அதிவீராமநதி, வைகைநதி, சிலைமாநதி, சித்திரநதி, பச்சைநதி, தாமிரவர்ணிநதி, தந்தநதி, முதலிய எண்ணில்லாத நதிகள் நிறையப்பெற்றது நம்முடைய தமிழ்த்தேயம்.

அரிச்சந்திரன், இராமன், நளன், பாண்டவர்கள் முதலிய அரசர்கள் காலத்தில் நம்முடைய தமிழ்ப்பூமியில் கொடுங்கோளூரை இராசதானியாகக்கொண்டு மலைநாட்டை சேர வம்மிசத்தாரும்; மதுரையை இராசதானியாகக்கொண்டு பாண்டிநா

ட்டை பாண்டிய வம்மிசத்தாரும்; காவிரிப்பூம் புகார்ப்பட்டினத்தை இராசதானியாகக்கொண்டு சோழநாட்டை சோழவம்மிசத்தாரும்; பெரிய தாராபுரமென்றுவழங்கும் விராடபுரத்தை இராசதானியாகக்கொண்டு மச்சநாடு என்னும் கொங்குநாட்டை விராட வம்மிசத்தாரும் ஆண்டுவந்தார்கள். சிற்றரசனும் விராடனுடைய மைத்துனனுமாகிய கீசகன் அரசு புரிந்திருந்த யூதசபுரம் கருவூருக்கும் விராடபுரத்துக்கும் மத்தியில் சின்ன தாராபுரமென்று வழங்குகிறது. வீமசேனன் கீசகனைவதைத்த தானம் விராடபுரத்துக்கும் பழநிக்கும் மத்தியில் கீரனூர் என்று வழங்குகிறது. அருச்சுனன் மாடுதிருப்பிய தானம் விராடபுரத்துக்கு வடக்கு, (உ௪-மைல் தூரத்தில்) ஈரோடு போத்தனூர் இரயில்மார்க்கத்தில் திருப்பூர் என்று வழங்குகிறது. வீமசேனன் இடும்பாசுரனைவதைத்து அவனுடைய தங்கையாகிய இடும்பியைக் கலியாணஞ்செய்துகொண்டதானம் திருவாரூர் அறந்தாங்கி இரயில்மார்க்கத்தில் பாண்டிக்குத் தெற்கில் இடும்பாவனம் என்று வழங்கும் சிவதலம். பாண்டவர்கள் வசித்திருந்த வேத்திரகீயமென்னும் முந்நூற்று மங்கலம் அகரமிருந்த தானம் திருவாரூர் அறந்தாங்கி இரயில் மார்க்கத்தில் திருநெல்லிக்காவுக்குக் கிழக்கு வலிவலமென்று வழங்கும் சிவதலம். வேத்திரகீயத்திலிருந்து பாண்டவர்கள் ஒரு பகலும் ஒரு இராத்திரியும் நடந்துபோய் துருவதேயன் என்னும் பாஞ்சாலராசனுடைய குமாரத்தியாகிய திரௌபதியை மாலையிட்டதானம் நீலகிரி; இதனை அம்மலையின் மேலிருக்கும் துருவர் என்னும் சாதியார் (பாண்டவர்கள் திரௌபதிக்கு ஐந்து தாலிகட்டியபடி) கலியாணப்பெண்களுக்கு ஐந்து தாலி கட்டும் வழக்கம் வைத்துக்கொண்டிருத்தலினு லறியலாகும். பாண்டவர்கள் நச்சுப்பொய்கை நீரைக்குடித்து இறந்து உயிர் பெற்றதானம் விழுப்புரம், மாயவரம் இரயில் மார்க்கத்தில் வைத்தீசுரன் கோவிலுக்கு மேற்கில் திருமண்ணிப்படிக்கரை (இலுப்பைப்பட்டு) என்னும் சிவதலம். சமயகுரவர்கள் காலத்தில் மலைநாட்டை சேரமான் பெருமாணாயனாரும்; பாண்டி நாட்டை அரிமர்த்தனபாண்டியன், நெடுமாறநாயனார் என்போரும்

சோழநாட்டை இராசேந்திரசோழனும், தொண்டநாட்டை பல்லவ சோழனும், கொங்குநாட்டை தெய்வீகராசனும் ஆண்டார்கள்.

தமிழ்ப்பாஷை பன்னிரண்டுயிரும், பதினெட்டுமெய்யும், இருநூற்றுப்பதினாறு உயிர் மெய்யும், ஒரு ஆய்தமும் ஆகிய இருநூற்று நாற்பத்தேழு எழுத்துக்கள் கொண்டது. அவற்றுள் ஐந்து உயிர்க்குறிலும், தொண்ணூறு உயிர் மெய்க்குறிலும், ஏழு உயிர் நெடிலும், நூற்றிருபத்தாறு உயிர் மெய் நெடிலும், மூன்று சுட்டுயிரும், நான்கு வினாவுயிரும், ஒரு வினாவுயிர் மெய்யும், ஆறு வல்லின மெய்யும், எழுபத்திரண்டு வல்லின வுயிர்மெய்யும், ஆறு மெல்லின மெய்யும், எழுபத்திரண்டு மெல்லின வுயிர்மெய்யும், ஆறு இடையின மெய்யும், எழுபத்திரண்டு இடையின வுயிர்மெய்யும் இருக்கின்றன. இப்பாஷைக்கு எப்பாஷையும் ஒப்பாகாது. தனக்குத்தானே ஒப்புமுயர்வுமுடையது. இப்பாஷையால் எப்பாஷையையும் பிழையின்றிஎழுதலாம். எப்பாஷையாலும் இப்பாஷையைப் பிழையின்றி எழுத முடியாது. இப்பாஷை சூலைநோய் விலக்குவித்தல், நீற்றறையைக்குளிர்ச்சியாக்குவித்தல், விடத்தை யமுதமாக்குவித்தல், யானையை வணங்கச்செய்வித்தல், கருங்கல்லைத் தெப்பமாக்குவித்தல், கதவந்திறப்பித்தல், கதவமடைப்பித்தல், விடமிறக்குவித்தல், என்பைப்பெண்ணாக்குவித்தல், ஆண்பனையைப்பெண்பனையாக்குவித்தல், முயலகன் என்னுங்குமரகண்டவலியைநீக்குவித்தல், குளிர்சுரமகற்றுவித்தல், ஆற்றிலெதிரேறிச்செல்லல், அக்கினியில் வேகாதிருத்தல், பொற்கிழிகொடுத்தல், ஆற்றிலோடஞ்செலுத்துவித்தல், ஆற்றுநீரை விலக்குவித்தல், முதலையுண்டபிள்ளையைச்சென்ற வயது முதிர்ச்சியோடழைப்பித்தல், பொன்மாரிபெய்வித்தல், மழைபெய்வித்தல், மழையை ஓய்வித்தல், அரிசி விளைவித்தல், புடைவை காய்ப்பித்தல், ஆற்றில் பால் தயிர் நெய் வருவித்தல், பனந்துண்டம் பழங்கொடுத்தல், வெட்டிக்கிடந்த பலாகாய்த்தல் முதலியபல அற்புதங்களைச்செய்த தெய்வத்தன்மை பொருந்தியது. இப்பாஷையின் தெய்வத்தன்மை எப்பாஷையிலும் இல்லை. இப்பாஷையின் தெய்வத்த

ன்மை சுத்தமாகவுச்சரிக்கும் தமிழர்களின் திருவாக்கினின்று விளங்கும். ஆதியில் இப்பாஷை எப்பாஷைக்கலப்புமில்லாமல் சுத்தமாகவழங்கி வந்தது. வடதேயத்திலிருந்து நாளடைவிலே மனைவியர்களோடு தவம் புரிபவர்கள்போல இத்தேயத்தில் குடியேறிய ஆரியர்கள் சத்தபேத மில்லாமல் சுத்தமாகவுச்சரிக்கத்தெரியாமையால் அவர்களுடைய சொந்தபாஷையாகிய ஆரியபாஷையைத் தமிழ்ப்பாஷையில் இடை யிடையே கலந்து பேசி சத்தபேதத்தை யுண்டாக்கினார்கள். இக்காரணத்தினால் தமிழ்ப்பாஷைக்குக் கௌரவக்குறைவு உண்டாயிற்று. அக்காலத்தில் பரமசிவனுடைய கிருபாநோக்கத்தினால் சுப்பிரமணியக்கடவுள் சீகாழியில் பிராமணர் மரபில் திருவவதாரஞ்செய்து தமிழ்ப்பாஷையை ஓதியுணராது திருமறையை பதினாறாயிரந் திருப்பாடலாகத் திருவாய் மலர்ந்தருளித்தமிழ்ப்பாஷையின் தெய்வத்தன்மையை விளக்கிக்காட்டியருளினார். இக்காரணத்தினால் தமிழ்ப்பாஷையே தெய்வத்தன்மை பொருந்திய பாஷையென்பதும், தமிழ்ப்பாஷைக்கு எப்பாஷையும் ஒப்புயர் வுடையதன்றென்பதும் உள்ளங்கை நெல்லிக்கனியே யாகும். பின்னர் நாளடைவிலே இத்தேயத்தில் குடியேறிய தெலுங்கர், கன்னடர், மகாராட்டிரர், சௌராட்டிரர், அரபியர், ஈரோப்பியர் முதலியோர் தமிழ்ப்பாஷையைச்சத்தபேதம் வராமல் உச்சரிக்கத் தெரியாமையால் தங்கள் தங்கள் பாஷைகளை இடை யிடையே கலந்தும், உச்சரிப்பைக்குறைத்தும், உச்சரிப்பைக்கூட்டியும் பேசவும், எழுதவும் ஆரம்பித்தார்கள். இந்த நிலைமையில் ஆரியபாஷையிலுள்ள ஜ, ஸ, ஷ, க்ஷ, ஹ என்னும் எழுத்துக்களின் வகையறா அறுபத்தைந்து எழுத்துக்களை தமிழ்ப்பாஷையில் கலந்து, சத்தபேதத்தை விளைவித்து, எழுதவும் படிக்கவும் பழக்குகிறார்கள். இதனால் தமிழ்ப்பாஷைக்கு அங்கவீனமுண்டாகி தெய்வத்தன்மை குறைகிறது. எப்பாஷையுதவியுமில்லாமல் பேசவும், எழுதவும், படிக்கவும், உரைசொல்லவும் பலமில்லாத ஆரியபாஷையிலிருக்கிற அறுபத்தைந்து எழுத்துக்களை இப்பாஷையில் கலந்து பேசவும் எழுதவும் பழக்குதலால் ஆரியர்களுக்கு இப்பாஷையைச்சுத்தமாக வுச்சரிக்கும் வலியில்லையென்பது நிச்சயமே யாகும். தமிழ்த்தேயத்திலே நடந்ததும்

தமிழ்ப்பாடையிலேயுள்ளதுமாகிய சைவசமயத்திருவிளையாடற் கதைகளை பாடசாலைகளில் பாடமாகவைத்து மாணுக்கர்களுக்குப்போதிக்காத காரணத்தினுல் அகச்சமயத்தார்களில் சிலர் மதுமாமிசம் புசித்துக்களிக்கும் (மாடன், வீரன், கருப்பன், காத்தன், முனியன், காக்கையன், பட்டவன், முன்னடியன், பேச்சி முதலிய பேய்த்தெய்வங்களை வழிபடும்) பேய்ச்சமயத்திலும்; சிலர் பெண்ணுசை, பொன்னுசை, மண்ணுசை என்னும் வலைகளை வீசி மனிதர்களைப்பிடிக்கும் சமயத்திலும், சிலர் காமன் பண்டிகை என்னும் பெயரைவைத்து (பேய்க்கரும்பையும் கொட்டைக்கழியையுஞ்சேர்த்து வைக்கோற்புரியைச்சுற்றி, வரட்டியைக்கோர்த்துக்கட்டி, மாசிமாசம் பூர்வபக்க்கம் துதியையில் நட்டு, பூரணை வரையில் பதினுன்கு நாள் பிணப்பறையடித்து ஒப்பாரிசொல்லியும், இலாவணி பாடியும் கொளுத்தும்) ஒலிப்பண்டிகை கொண்டாடுதலிலும் பிரவேசித்துவிட்டார்கள். தேசம், சாதி, பாடை, மதம் இந்நான்கும் ஒன்றைபொன்று பற்றியிருத்தலினுல் தேசாபிமானம், சாதியபிமானம், பாடாபிமானம், மதாபிமானம் என்ற நான்கையும் கைவிடலாகாது. நம்முடைய தமிழ்த்தேயத்திலே, பூர்வீகத் தமிழர் மரபிலே பிறந்த தமிழர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்களால் கூடியவரையில் முயற்சிசெய்து ஆங்காங்கு பற்பல தமிழ்ப்பாடசாலைகளை ஏற்படுத்தி (இடைக்காலத்தில் சொரூபபேதமடைந்த ணு, ணை, ெணு, ேணு, லை, ளை, று, ெறு, ேறு, னு, னை, ெனு, ேனு, இவ்வெழுத்துக்களுக்குப்பதிலாக ஆதிகாலத்திலிருந்தபடி ணா, ணை, ணொ, ணோ, லை, ளை, றா, றொ, றோ, னா, னை, னொ, னோ, இவ்வெழுத்துக்களை அமைத்தும், ஆரியபாடையிலிருந்து சேர்ந்திருக்கும் ஜ, ஸ, ஷ, க்ஷ, ஹ இவ்வெழுத்துக்களின் வகையறு அறுபத்தைந்து எழுத்துக்களை நீக்கியும்) சுத்தத்தமிழில் மனிதர்கள், மிருகங்கள், பறவைகள், ஊர்வன, நகர்வன, நீர்வாழ்வன, மரங்கள், திக்குகள், நிலம், நீர், தீ, காற்று, வெளி, சந்திரன், சூரியன், திக்குப்பாலகர், பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் முதலியவற்றைப்பற்றிய பாடங்களையும்; திருநீறு, உருத்திராக்கம், ஆலயவழிபாடு என்பவற்றைப்பற்றிய பாடங்களையும்; நம் தமி

ழ்த்தேயத்திலே நடந்த சைவசமயக்கதைகளையும்; ஆத்திசூடி, கொன்றைவேந்தன், உலகநீதி, வெற்றிவேற்கை, மூதுரை, நல்வழி, நன்னெறி, நீதிவெண்பா, நீதிநெறி விளக்கம், திரிகடுகம், நான்மணிக்கடிகை முதலிய நீதி நூல்களையும்; திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி நிகண்டு முதலிய இலக்கிய நூல்களையும்; அகத்தியம், தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களையும்; தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருமந்திரம், திருக்குறள் முதலிய திருமறைகளையும்; மெய்கண்ட சாத்திரம் (பதினான்கு), ஒழிவிலொடுக்கம், சிவஞானவள்ளல், கொலைமறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம் முதலிய ஞானசாத்திரங்களையும்; ஞானம், மந்திரம், வைத்தியம், சோதியம், வாதம் முதலிய எல்லாநிறைந்த சித்தர் அருளிச்செய்த திருமறைகளையும் மாணாக்கர்களுக்குப் போதிப்பார்களாயின் தமிழ்ப்பாடையின் தெய்வத்தன்மையும், தமிழ்த்திருமறைகளின் பெருமையும், சைவசமயவுயர்வும், தமிழ்ஞானிகளின் பொறுமையும் மலைமேல்வைத்த விளக்குப்போல உலகமெங்கும் பிரகாசிக்கும். தமிழ்ப்பாடசாலைகளை அமைப்போர் இகபரசுகானுபவங்களை எளிதிலடைவர். அவர்கள் பெருமை உலகமுள்ளளவும் நிலைநிற்கும். பரமசிவனைவிட கடவுளும், சைவசமயத்தைவிட உயர்ந்தசமயமும், தமிழ்த்தேயத்தைவிட மேலானதேயமும், தமிழ்ப்பாடையைவிட தெய்வத்தன்மைபொருந்திய பாடையும், தமிழ்ப்பூமியைவிட புண்ணியபூமியும், ஐந்தெழுத்தைவிட உயர்வாகிய மந்திரமும், தமிழ்த்திருமறைகளைவிட உண்மையாகிய திருமறைகளும், தமிழர்களைவிட பரிசுத்தமனமுடையவர்களும் உலகத்தில் இல்லை.

ஆசிரியருபதேசத்தால் மந்திரத்தையும், மந்திரத்தினால் தவத்தையும், தவத்தினால் ஞானத்தையும், ஞானத்தினால் கடவுளையும் அடையவேண்டியிருத்தலினால் எச்சமயத்திலும், எத்தேயத்திலும், எப்பாடையிலும், ஆசிரியரும், மந்திரமும் உண்டென்பதை யாவருமறிவர். நம்முடைய தமிழ்ப்பாடையில் நமக்காக எழுகோடி மகாமந்திரங்களிருக்கின்றன. அவையாவும் திருநான்மறைமுடிவாகிய சிவமந்திரத்தை ஆதியாகவுடையன. அச்சிவமந்திரம் திரையெழுத்து, மலவெழுத்து,

இறையெழுத்து, பரையெழுத்து, சிவவெழுத்து என்னும் ஐந்தெழுத்தையுடையது. அவற்றுள் இரையெழுத்து மண்ணின்சுபாவமாய் வாசனைவிடயமாய் வெண்ணிறமாய் பூமிமயமாய் நிவர்த்திகலையாய் சத்தியோசாதமாய் கர்மசாதாக்கியமாய். நான்முகரூபமாய் தோற்றத்தைத்தருகின்றமறைப்பையுடையது மலவெழுத்து நீரின்சுபாவமாய் சுவைவிடயமாய் கருநிறமாய் நீர்மயமாய் பிரதிட்டாகலையாய் வாமதேவமாய் கர்த்திருசாதாக்கியமாய் விட்டுணுரூபமாய் காப்பைத்தருகின்ற மயக்கத்தையுடையது. இறையெழுத்து தீயின்சுபாவமாய் உருவவிடயமாய் சிவந்தநிறமாய் அக்கினிமயமாய் வித்தியாகலையாய் அகோரமாய் மூர்த்திசாதாக்கியமாய் உருத்திரசொரூபமாய் அழிவைத்தருகின்ற ஞானசூரியப்பிரகாசத்தையுடையது. பரையெழுத்து காற்றின்சுபாவமாய் தீண்டல்விடயமாய் புகைநிறமாய் காற்றுமயமாய் சாந்திகலையாய் தற்புருடமாய் அமூர்த்திசாதாக்கியமாய் மகேசுவரரூபமாய் மறைப்பைத்தருகின்ற சத்திவடிவத்தையுடையது. சிவவெழுத்து வெளியின்சுபாவமாய் ஓசைவிடயமாய் நீலநிறமாய் சுத்தவெளியாய் சாந்தியாதீதகலையாய் ஈசானமாய் சிவசாதாக்கியமாய் சதாசிவரூபமாய் அருளைத்தருகின்ற சிவவடிவத்தையுடையது. இரையெழுத்தை இரோதமெனவும், மலவெழுத்தை ஆணவமெனவும், இறையெழுத்தை பதியெனவும், பரையெழுத்தை அருளெனவும், சிவவெழுத்தை ஆவியெனவுங் கூறுவர். இரையெழுத்து பரையெழுத்திலும், மலவெழுத்து சிவவெழுத்திலும், பரையெழுத்து சிவவெழுத்து இறையெழுத்திலும், இறையெழுத்துதானேயாயும் ஒடுங்கும் என்பர். இரையெழுத்து, மலவெழுத்து, இறையெழுத்து, பரையெழுத்து, சிவவெழுத்து இவ்வைந்து முறையேகூடியது தூலம்; இதனை உபதேசிக்கத்தக்கவர் சமயாசிரியர். இறையெழுத்து, பரையெழுத்து, சிவவெழுத்து, இரையெழுத்து, மலவெழுத்து இவ்வைந்து முறையே கூடிய தொருதலைமாணிக்கமென்னும் சூக்குமம்; இதனை ஆசிரியருபதேசிக்கலும், உபதேசித்தபோதிலும் மாணாக்கர் செபித்தலுமரிதாம்; உபதேசிக்கத்தக்கவர் ஞானாசிரியர். இறையெழுத்து, பரையெழுத்து,

சிவவெழுத்து, பரையெழுத்து, இறையெழுத்து இவ்வைந்து முறையேகூடியது இருதலை மாணிக்கமென்னும் காரணம்; இஃது பவமாகியகடலைக்கடந்து முத்தியாகிய கரையிற் சேரத் தெப்பமாகும்; இதனை உபதேசிக்கத்தக்கவர் மௌனாசிரியர். பரையெழுத்து, இறையெழுத்து இவ்விரண்டு முறையேகூடியது மகாகாரணம். இதுவே பதியாகும்; இதனை உபதேசிக்கத் தக்கவர் அருளிறைவடிவங்கொண்ட ஞானதேசிகர். இறையெழுத்தே மகாமனு. இவ்வெழுத்தை இருதயத்தில் அடக்கினவர் தேகத்தோடு முத்தியடைவர். இந்தெழுத்தை இருபத்தைந்து வீடு, நூற்றிருபத்தைந்து வீடு முதலிய இயந்திரங்களில் செப்புத்தகட்டில் அடைத்துப்பூசிப்போர் எல்லாவிதப்பேற்றையும் எளிதிலடைவர். இந்தெழுத்தைக்கொண்டு வசியம், மோகனம், தம்பனம், உச்சாடனம், ஆக்ருடணம், வித்துவேடணம், பேதனம், மாரணம் முதலிய எல்லாவிதத்தொழில்களும் செய்யலாம். இவற்றை யெல்லாம் அகத்தியர் மந்திரகாவியம் முதலிய சித்தர்கள் நூற்களாலும்; தேவாரம், திருவாசகம், திருமந்திரமுதலிய திருமறைகளாலும்; சிவஞானவள்ளல், மெய்கண்டசாத்திரம் முதலிய ஞானசாத்திரங்களாலும் அறியலாகும். ஆரியர்கள் நம்மையேமாற்றும்பொருட்டு நம்முடைய தமிழ்ப்பாடையிலும், தமிழ்மறைகளிலும், தமிழ் மந்திரங்களிலும் தெய்வத் தன்மை யில்லாததுபோலவும்; அவர்களுடைய ஆரியபாடையிலும், ஆரியமறைகளிலும், ஆரியமந்திரங்களிலும் தெய்வத்தன்மையிருப்பதுபோலவும் பேசுகிறார்கள். அவர்கள் பேசுவது உண்மையாக விருக்குமாகில் ஆரியபாடையையும், ஆரியமறைகளையும், ஆரிய மந்திரங்களையும் கைவிட்டு பொருள்சம்பாதிக்கும்பொருட்டு வேறு பாடைபடிக்க நியாயமில்லை. இக்காரணத்தினால் அவர்கள் பேசுவது உண்மையல்ல. இதனையறியாத தமிழர்களிற் சிலர் வயிற்றுக்கொடுமையின்பொருட்டு ஆரிய பாடையையும் ஆரிய சாத்திரங்களையும் படித்து ஒருவித பிரயோசனத்தையும் அடையாமல் விழிக்கின்றார்கள் அந்தோ பரிதாபம்! பரிதாபம்!! சமயம், விசேடம், நிர்வாணம் முதலிய தீக்கைகளைப்பெற விரும்பும் சைவர்கள் தமிழ் ஞானாசிரியர்களிடத்தில் பெறுவது பெரும்பேறாகும்.

அகத்திய முனிவர் சிவாலயமுனிவருக்கு அடங்கன்முறை முழுதையும் உபதேசித்து, அதினின்றும் சுருக்கமாக இருபத்தைந்து திருப்பதிகங்களை எடுத்துத்திரட்டி, அதிலுள்ள இருநூற்று ஐம்பத்தைந்து திருப்பாடல்களையும் நாடோறும் பாராயணஞ்செய்பவர்கள் அடங்கன்முறை முழுதையும் பாராயணஞ்செய்பவர்களாவர்கள் என்று திருவாய்மலர்ந்தருளினார். சிவாலயமுனிவர் அப்படியே அப்பாடல்களை நெடுங்காலம் பாராயணஞ்செய்து, சிவபெருமானுடைய திருவருளைப் பெற்றார். இப்புத்தகம் அகத்தியர் தேவாரத்திரட்டு என்று வழங்குகிறது. இக்காலத்தில் ஒரு திருப்பதிகமேனும் பாடல் விடாமல் வரிசைக்கிரமமாக ஓதுபவர்களைக் காண்கிலம். முதலுங்கடையுமாகிய இரண்டு அல்லது இடையில் ஒன்றுசேர்த்து மூன்று பாடல்களை ஓதினால் ஒரு திருப்பதிகமுற்றும் ஓதினபலனுண்டாகுமென்று நினைத்து, அவ்வாறே ஓதும் வழக்கத்தைக் கைக்கொண்டுவிட்டார்கள். இஃது சுருசுருக்கம்போலும். ஆசிரியர்கள் ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வொரு திருவிளையாடலை அமைத்து, பத்து அல்லது பதினொரு திருப்பாடல்களை ஒரு திருப்பதிகமாக அருளிச்செய்திருத்தலினால் ஒரு திருப்பதிகத்தில் ஒரு திருப்பாடலைவிட்டு ஓதினாலும் அது அத்திருப்பதிகத்துக்கு அங்கவீனமேயாகும். திருப்பதிகத்துக்கு அங்கவீனமுண்டாகும்படி ஓதுவோர் வறுமைப் பெருக்கத்தையும் வயதுச்சுருக்கத்தையும் அடைவர். நாம் திருமறைத்தேவாரத்திருப்பதிகங்கள் ஓத ஆரம்பித்தது வறுமைப் பெருக்கத்தையும் வயதுச்சுருக்கத்தையும் அடைவதற்கன்று. திருட்சேத்திரக்கோவை பண், திருட்சேத்திரக்கோவை திருத்தாண்டகம், அடைவுதிருத்தாண்டகம், காப்புதிருத்தாண்டகம், திருநாட்டுத்தொகை, ஊர்த்தொகை என்னுந்திருப்பதிகங்களை ஓதும்போது அப்பதிகங்களில் சொல்லப்படும் சிவதலங்களின் தியானமுண்டாகிறது. ஒவ்வொரு பதிகத்திலுமுள்ள முதலுங்கடையுமாகிய பாடல்களை ஓதினால் அப்பாடல்களில் சொல்லப்படும் சிவதலங்களின் தியானமாத்திரமுண்டாகும். மற்றையபாடல்களில் சொல்லப்படும் சிவதலங்களின் தியானமுண்டாகாது. திருத்தொண்டத்தொகை ஓதும்போது முதலுங்கடையுமாகிய பாடல்

களை ஓதினால் அப்பாடல்களில் சொல்லப்படும் திருத்தொண்டர்களுக்கு மாத்திரம் அடிமைத்திறங் கூறியதாகும்; மற்றைப் பாடல்களில் சொல்லப்படும் திருத்தொண்டர்களுக்கு அடிமைத் திறங்கூறியதாகாது. இக்காரணங்களினால் ஒரு திருப்பதிகத்தில் முதலுங்கடையுமாகிய திருப்பாடல்களை மாத்திரம் ஓதுதல் கூடவே கூடாது. திருமறைத்தேவாரத் திருப்பதிகம் ஒன்றேனும் முற்றும் ஓத மனமில்லாதவர்கள் சிவபெருமானுடைய திருவருளைப்பெறமுடியாது. ஒரு திருப்பதிகமேனும் அன்போடு முற்றும் ஓதுவோர் நிறைந்த செல்வத்தையும் நீண்ட வாழ்நாளையும் சிவபெருமானுடைய திருவருளையும் எளிதில் அடைவர்.

திருத்தில்லை என்று சொல்லப்படும் சிதம்பரதலத்தில் "திருச்சிற்றம்பலம்"-என்னும் பொற்சபையினிடத்தில் ஆனந்த தாண்டவஞ்செய்தருளுகின்ற (திருச்சிற்றம்பலமுடையாராகிய) சபாநாயகப்பெருமான் மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த திருவாசகம், திருக்கோவையார் என்பவற்றை தமது திருக்கரத்தினால் எழுதிய காரணத்தினாலும்; திருநாரையூர் பொல்லாப்பிள்ளையார் மாணாக்கராகிய நம்பியாண்டார் நம்பி என்பவர் தமிழ்த்திருமறைத் தேவாரத்திருப்பதிகங்களை அத் திருச்சிற்றம்பலத்துக்கு மேற்புறத்தில் கண்டெடுத்த காரணத்தினாலும்; தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருமந்திரம், நாற்பது பிரபந்தங்கள் என்பவற்றை அந்நம்பியாண்டார் நம்பி சபாநாயகர் சந்நிதியில் பதினொரு திருமுறைகளாக வகுத்த காரணத்தினாலும்; சேக்கிழார்நாயனார் சபாநாயகப்பெருமான் அடியெடுத்துக்கொடுக்க, திருத்தொண்டர் பெரியபுராணம் பாடிமுடித்த காரணத்தினாலும் ஞாபகத்துக்காக பன்னிரு திருமுறைகளிலும் ஒவ்வொரு திருப்பதிகங்களின் முன்னும் பின்னும் "தி ரு ச் சி ற் ற ம் ப ல ம்" என்று போடப்பட்டிருக்கின்றன. இதனை உணராதசிலர் அத்தலத்தை உயர்வுபடுத்தவேண்டியதற்காகப் போட்டிருப்பதுபோலவும், அதனால் மற்றையதலங்களுக்குத்தாழ்வுண்டாவது போலவும் எண்ணங்கொண்டு தாங்கள் திருமறைத்தேவாரத்திருப்பதிகங்கள் ஓத ஆரம்பிக்கும்போது பிரணவமந்திரம் கூறி பின்னர்

தேவாரத்திருப்பதிகங்கள் முதலியவற்றை யோதுகின்றார்களாம். இஃது நமது சைவசமயத்தமிழ்த்திருமறையாசிரியர்களின் எண்ணத்துக்கு முற்றும் விரோதமாகும். பிரணவம் ஓதித் தமிழ்த்திருமறையோதுவது விதியானால் ஆசிரியர்கள் அவ்வாறு செய்யாதிருக்க நியாயமில்லை. ஆசிரியர்கள் விதித்தபடி நாம் நடக்கவேண்டும்; அதற்கு மாறாக நடப்பது குருநிந்தையாகும். பிரணவ மந்திரத்தை ஞானாசிரியரிடம் உபதேசம் பெற்று, தனித்திருந்து பிறரறியாவண்ணம் செபித்தல் வேண்டும். பிறரறியும்படி ஓதுவது பெரும்பாவமாகும். ஆரியர்கள் ஓதுகின்றார்களே என்றாலோ ஆரியமதத்துக்கும் சைவமதத்துக்கும் பேதமிருத்தலினாலும் ஆரியர்களுக்கும் தமிழர்களுக்கும் வித்தியாசமிருத்தலினாலும், ஆரியபாடைக்கும் தமிழ்ப்பாடைக்கும் மாறுபாடிருத்தலினாலும், ஆரியமறைக்கும் தமிழ்மறைக்கும் வேறுபாடிருத்தலினாலும், ஆரியர்கள் தமிழில் மறையில்லையென்று சொல்வதனாலும், தங்களை உயர்வுபடுத்திக்கொள்ளும் பொருட்டு ஆரியபாடையைத் தேவபாடையென்று சொல்வதனாலும், நம் தமிழ்த்தேயத்திலுள்ள நம்முடைய கோயில்களில் ஆரியமறையை முன்னும் நம் தமிழ்மறையைப் பின்னும் ஓதும் வழக்கத்தைத் தாபித்திருத்தலினாலும் அஃது ஒப்பத்தகுந்ததன்று.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரை திருமங்கையாழ்வார் வாதில் வென்றதாக குருப்பிரபாவமென்னும் நூலில் சொல்லப்பட்டிருக்கிறது. அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய கோச்செங்கட் சோழ நாயனாரால் கட்டப்பெற்றதும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் காலத்திலிருந்த திருநாவுக்கரசு நாயனார் திருவாய்மலர்ந்தருளிய அடைவு திருத்தாண்டகம் ஐந்தாம் பாடலில்உள்ளதுமாகிய எழுபத்தெட்டுத் திருப்பெருங் கோயில்களிலொன்றாகிய திருநறையூர்ப் பெருங்கோயிலும்; திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் காலத்துக்குப்பிற்பட்டகாலத்தவராகிய சுந்தரமூர்த்திநாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருநாட்டுத்தொகை ஐந்தாம்பாடலில் உள்ளதும், முற்கூறிய எழுபத்தெட்டுத்திருப்பெருங் கோயில்களி லொன்றாகியதுமாகிய

திருக்கிழை வழிப்பெருங் கோயிலும்; சுந்தரமூர்த்தி நாயனார் காலத்துக்குப்பிற்பட்டவராகிய அருணகிரிநாதர் திருவாய்மலர்ந் தருளிய திருப்புகழ்த் திருப்பாடற்பெற்ற சுப்பிரமணிய தலங் களில் திருவேங்கடமலை, குருடிமலை, தான்றோன்றிமலை, பழ முதிர் சோலை, சிபுருடமங்கை என்னும்கோவில்களும் விட்டுணு தலங்களாகி திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய பிர பந்தம்பெற்று விளங்குவதால் திருமங்கையாழ்வார் காலம் அரு ணகிரிநாதர் காலத்துக்கு நீண்டகாலம் பிற்பட்டதாகும். அரு ணகிரிநாதர் காலத்துக்கு நீண்டகாலமுற்பட்டிருந்த திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரை அருணகிரிநாதர் காலத்துக்கு நீண்டகாலம் பிற்பட்டிருந்த திருமங்கையாழ்வார் வாதில் வென்றாரென்பது எந்தமட்டில் உண்மையாகுமென்பதை இதை வாசிப்போர்களே அறிவார்கள். சுப்பிரமணியக்கடவுள் மலைகள் தோறும் திருக்கோயில் கொண்டு விளங்குங்காரணத்தினால் அவருக்கு சிலம்பன் என்னுந் திருநாமமுண்டாயிற்று. விட்டு ணுக்கு சிலம்பன், பெருமாளென்ற திருநாமங்கள் இலக்கியத் தில் இல்லாத காரணத்தினால் மலைகளின்மேலிருக்கும் விட்டுணு கோயில்களெல்லாம் முற்காலத்தில் சுப்பிரமணியர்கோயில்களா யிருந்தன வென்பதும், திருப்புகழ்பெற்ற சுப்பிரமணிய தலங் கள் விட்டுணு தலங்களாயின பின்பு திருப்புகழில் சுப்பிரமணி யக்கடவுளுக்கு வந்திருக்கும் பெருமாள் என்றபெயரை விட்டு ணுக்கு உபயோகப்படுத்திக்கொண்டார்களென்பதும் உள்ள ங்கை நெல்லிக்கனிபோ யாகும். (சிலம்பு—மலை)

ஆரியபாடை (மொழிபெயர்ப்பு) ப்புராணங்கள் ஒன்றுக் கொன்று மாறாக நம்முடைய தமிழ்த்தேயத்தில் பரமசிவன் செய்தருளிய திருவிளையாடல்களெல்லாம் வடதேயத்தில் நடந் ததுபோலவும், பற் பல தலங்களில் ஒரே திருவிளையாடல் நடந் ததுபோலவுங் கூறுகின்றன. அங்ஙனங் கூறுவதெல்லாம் ஆரி யர்கள் தங்கள் தேயத்தையும் பாடையையும் உயர்வுபடுத்த வே ண்டியும், பொருளை விரும்பியும் கூறியதாகும். பட்டினத்தடி கள் கொங்குநாட்டைக்கடந்து, சோழநாட்டிற் புகுந்து, புதுக் கோட்டைக்கு மேல்புறமுள்ள திருக்கோகரணத்தையடைந்து,

அங்கிருந்து (சாக்கைக்கோட்டைக்கும் தேவகோட்டைக்கும் மத்தியில் உஞ்சேனை என்று வழங்கும்) திருவுஞ்சேனை மாகாளத்துக்குப்போகும் போது சாக்கைக்கோட்டைக்குத் தென்மேற்கில் காட்டிலிருந்த விநாயகர்கோவிலில் இராத்தங்கி திட்டையிலிருந்தார். அன்றி ராத்திரி அவ்வழியே விநாயகரைப்பிரார்த்தித்துக்கொண்டு சென்ற திருடர்கள் அக்காலத்தில் சாக்கைக்கோட்டையில் அரசு புரிந்துகொண்டிருந்த பத்திரகிரியென்னும் அரசனுடைய அரண்மனையிற் புகுந்து திருடிக்கொண்டு திரும்பிப்போகும்போது ஒரு முத்தாரத்தை எடுத்து விநாயகரை நோக்கி எறிந்துவிட்டுச்சென்றார்கள். அவ்வாரம் விநாயகருக்கு எதிரில் திட்டையிலிருந்த பட்டினத்தடிகளுடைய கழுத்தில் விழுந்துகிடந்தது. உதயத்தில் அவ்வரண்மனையிலிருந்து திருடர்களைப் பிடிக்கப்புறப்பட்ட தலையாரிகள் பட்டினத்தடிகள் கழுத்தில் முத்தாரத்தைக்கண்டு, அடிகளைப் பிடித்து, அடித்துக்கொண்டுபோய் அரசன்முன் விட்டார்கள். அடிகள் தம்மேல் அடிவிழும்போதெல்லாம் பழமனமே பழமனமே என்பர். அரசன் கேட்ட கேள்விகளுக்கு அடிகள் யாதொன்றும் பதில் சொல்லவில்லை. அரசன் கோபங்கொண்டு அடிகளைக் கழுவிற்போடத் தீர்மானித்தான். அடிகள் கழுமரத்தைக் கண்டதும்

"என்செயலாவதி யாதொன்று மில்லை யினித்தெய்வமே
யுன்செயலே யென்றுணரப்பெற்றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்றுமில்லைப் பிறப்பதற்கு
முன்செய்த தீவினையோ விங்ஙனே வந்து மூண்டதுவே."

என்னும் திருப்பாடலைப்பாட; கழுமரம் எரிந்துபோயிற்று. அதனைத் தலையாரிகள் அரசனிடத்தில் தெரிவித்தார்கள் அரசன் பயந்து ஓடிவந்து அடிகளுடைய திருவடிகளில் விழுந்து தான்செய்த குற்றத்தை மன்னிக்கும்படி கேட்டுக்கொண்டான். இஃது விக்கிரமாதித்தன் என்னும் அரசன் அரசுபுரிந்திருந்த அவந்தி மாகாளத்தில் நடந்ததுபோல எழுதியிருக்கிறார்கள். இப்படியே நமது தமிழ்த்தேயத்தில் நடந்த திருவிளையாடல்களெல்லாம் நாளடைவிலே வடதேயத்தில் குடியேறி அத்தேயத்துக்கு உயர்வையும் நம்தேயத்துக்குத் தாழ்வையுங் கொடுக்

கின்றன. இப்படி நேரிடுவதற்குக்காரணம் ஆரியர்கள் கல்வியாகிய செல்வத்தையும், தமிழர்கள் மூடமாகிய செல்வத்தையுங் கைக்கொண்டிருத்தலே யாகும். தமிழர்கள் கல்வியாகிய செல்வத்தைக் கைக்கொள்வார்களாகில் இவர்களைவிட மேலாகிய அறிவுடையவர்கள் உலகத்தில் இல்லை யென்பது நிச்சயமே.

சேர சோழபாண்டியர்கள் முற்காலத்தில் நம்முடைய தமிழ்த்தேயத்தில் மலைகளிலும், காடுகளிலும், மரங்களின்மூலங்களிலும் தேவர், முனிவர், அரசர் முதலியோர்களால் பூசிக்கப் பெற்று விளங்கிய பல்லாயிரங்கோடி சிவலிங்கத்திருவுருவங்களுக்குத் தனித்தனி கோவில்கள் அமைத்து, பூசை திருவிழா முதலியன ஏற்படுத்தி, அவற்றிற்கு வேண்டிய நிலங்களைத் திருத்தி, அந்நிலங்களின் எல்லைகளில் சூலந்தீட்டிய கற்களை நாட்டி, அக்கற்களில் சூலத்தினடியிலும், செப்பேடுகளிலும், கோவில் மண்டபங்களிலும் சுவாமிபெயரால் நான்கெல்லை கட்டி சாதனம் எழுதி, அந்த நிலங்களைப் பலரிடத்திலும் பரம்பரைக் குடிக்காணிப்பாத்தியமாக அனுபவிக்கக்கொடுத்து, வருடந்தோறும் விளைவுக்குத்தக்கபடி அவர்கள் கொடுக்கும் வரும்படியைக்கொண்டு பூசை திருவிழா முதலியன எக்காலத்திலும் குறைவில்லாமல் நடந்துவரும்படி செய்திருந்தார்கள். அவ்வரசர்கள் மாறுதலடைந்ததும் குடிக்காணிப் பாத்தியமாக அந்நிலங்களை அனுபவித்துக்கொண்டிருந்தவர்களில் அனேகர் நிலங்களின் எல்லைகளில் சூலந்தீட்டி நாட்டியிருந்த கற்களையுடைத்தெறிந்தும், கோவில்களில் இருந்த செப்பேட்டுச் சாதனங்களை மறைத்தும், கோவில்களைத் திருப்பணி செய்பவர்கள் போல இடித்துச் சிலா சாதனங்களை யுடைத்தும் அந்த நிலங்களைச் சொந்தமென்று சொல்லி சுவாதீனப்படுத்திக்கொண்டார்கள். அனேகர் பின்னால் வந்த அரசர்கள் விதித்த அரசுரிமையைக் கொடாமல் ஏலத்தில் கேட்டு சொந்தமாக்கிக்கொண்டார்கள். அனேகர் இராசாங்கத்தார் அளந்தகாலத்தில் தங்கள் பெயரால் பதிவுசெய்து சொந்தமாக்கிக்கொண்டார்கள். இக்காரணங்களினால் பல்லாயிரங்கோயில்கள் பூசை முதலியயாதொன்றுமில்லாமல் காடு மூடப்பெற்று வெடித்துச் சரிந்து

விழுந்துகொண்டும், பல்லாயிரங்கோடி சிவலிங்கத் திருவுருவங்கள் கோவில் முதலிய யாதொன்றுமில்லாமல் வயல், வரப்பு, வாய்க்கால், திடல், திட்டு, காடு முதலிய தானங்களில் சந்திரன், சூரியன், வருணன், வாயு முதலிய தேவர்கள் பூசையைப்பெற்றுக்கொண்டும் இருக்கின்றன. சைவசமயாபிமானிகளாகிய சிவநேயச்செல்வர்கள் தங்கள் தங்களால் இயன்றவரையில் ஆங்காங்குள்ள சிவலிங்கத்திருவுருவங்களுக்கு சிறிய கொட்டகைகள் அமைத்து விசேடதினங்களில் ஒரு திருவிளக்கேனும் வைப்பார்களாயின் பெரும் புண்ணியமாகும்.

தேவாரமுதலிய பன்னிருதிருமுறை, திருப்புகழ்களில் கச்சூர் ஆலக்கோயில், கடம்பூர் கரக்கோயில், கருப்பறியலூர் கொகுடிக்கோயில், பாதிரிப்புலியூர் ஞாழற் கோயில், புத்தூர் திருக்கோயில், மதுரை (ஆலவாயில்) மணிக்கோயில், மிழைச்சூர் இளங்கோயில், கடம்பனூர் இளங்கோயில், மதுக்கூர் இளங்கோயில், ஆனைக்கா பெருங்கோயில், பெண்ணாகடம் (தூங்கானைமாடம்) பெருங்கோயில், சாய்க்காடு பெருங்கோயில், மண்ணிப்படிக்கரை பெருங்கோயில், செம்பொன் பள்ளி பெருங்கோயில், செம்பிருப்பு பெருங்கோயில், தலைச்சங்கங்காடு வடபெருங்கோயில், தலைச்சங்கங்காடு தென்பெருங்கோயில், ஆக்கூர் பெருங்கோயில், தேரழுந்தூர் பெருங்கோயில், வைகல் பெருங்கோயில், சேய்ஞலூர் பெருங்கோயில், கங்கைகொண்ட சோழேச்சரம் பெருங்கோயில், பூவனம் பெருங்கோயில், நறையூர் பெருங்கோயில், துர்க்காட்சி பெருங்கோயில், நாலூர் பெருங்கோயில், ஐராபதேச்சரம் பெருங்கோயில், பழையாறுவடதளி பெருங்கோயில், பழையாறு தென்தளி பெருங்கோயில், பழையாறு கீழ்த்தளி பெருங்கோயில், நல்லூர் பெருங்கோயில் ஆவூர் பெருங்கோயில், புள்ளமங்கை பெருங்கோயில், மாத்தூர் பெருங்கோயில், குடவாயில் பெருங்கோயில், இகண்ணி பெருங்கோயில், பெருவேளூர் பெருங்கோயில், பனையூர் பெருங்கோயில், நன்னிலம் பெருங்கோயில், இராமனந்தீச்சரம் பெருங்கோயில், மருகல் பெருங்கோயில், அம்பர் பெருங்கோயில், வீழிமிழலை பெருங்கோயில், பாம்புரம் பெருங்கோயில்,

பெருமுளை பெருங்கோயில், மாவூர் பெருங்கோயில், கீழ்வேளூர் பெருங்கோயில், தேவூர்பெருங்கோயில், சிக்கல்பெருங்கோயில், கடம்பனூர்பெருங்கோயில், நாகபட்டினம் பெருங்கோயில், வலிவலம் பெருங்கோயில், கீழைவழி பெருங்கோயில், தண்டலை (நீணெறி) பெருங்கோயில், களப்பாள் பெருங்கோயில், தஞ்சாவூர் பெருங்கோயில், இராசசேரிபுரம் பெருங்கோயில், முதலிய கோயில்களும்; அறப்பள்ளி, சிறப்பள்ளி, சிவப்பள்ளி, தவப்பள்ளி, நனிபள்ளி, மகேந்திரப்பள்ளி, சக்கரப்பள்ளி, மேலைக்காட்டுப்பள்ளி, கீழைக்காட்டுப்பள்ளி, முதலிய பள்ளிகளும்; அரத்துறை, அருள்துறை, பூந்துறை, கடம்பந்துறை, பராய்த்துறை, செந்துறை, வெண்துறை, பால்துறை, தவத்துறை, சோற்றுத்துறை, பாலைத்துறை, அரிசிற்பெருந்துறை, ஆளுடையார் பெருந்துறை, சந்திரலேகை பெருந்துறை, கீழைமாந்துறை, மேலைமாந்துறை, ஆவாடுதுறை, மயிலாடுதுறை, வடகுரங்காடு துறை, தென்குரங்காடுதுறை, அன்பில் ஆலந்துறை, அந்தவனல்லூர் ஆலந்துறை, குயில் ஆலந்துறை, சிறுபழூவூர் ஆலந்துறை, புள்ளமங்கை ஆலந்துறை முதலிய துறைகளும்; அண்ணல்வாயில், நெடுவாயில், நெய்தவாயில், ஞாழல்வாயில், காரைவாயில், நெல்வாயில், புனவாயில், குணவாயில், வடமுல்லைவாயில், தென்முல்லைவாயில் முதலிய வாயில்களும்; செம்பங்குடி, நல்லக்குடி, நாட்டியத்தான்குடி, கற்குடி, தென்களக்குடி, செங்காட்டங்குடி, கருந்திட்டைக்குடி, குத்தங்குடி, குருந்தங்குடி, அத்தங்குடி, வண்குடி, சிறுகுடி, கடையக்குடி, இள்ளிகுடி, கருக்குடி, வேள்விக்குடி, வேட்டக்குடி, வேதிகுடி, குறுமாணிகுடி, விடைவாய்க்குடி, தென்பரம்பைக்குடி, புற்குடி, மாகுடி, தேவன்குடி, நீலக்குடி, புதுக்குடி, சாட்டியக்குடி, இஞ்சிகுடி, மணன்மேற்குடி, இளையான்குடி, சாலைக்குடி, தனிச்சாத்தங்குடி, ஆலத்தாங்குடி, கோளக்குடி, இருப்பைக்குடி மங்கலக்குடி முதலிய குடிகளும்; கொள்ளிக்காடு, மறைக்காடு, வெண்காடு, வேற்காடு, பனங்காடு, காரைக்காடு, பழையனூர் ஆலங்காடு, தென் ஆலங்காடு முதலிய காடுகளும்; அதி (யரையமங்) கைவீரட்டம், கடவூர் வீரட்டம், கண்டியூர் வீரட்டம், குறுக்கை வீரட்டம், கோவலூர் வீரட்டம், பறியலூர்வீரட்டம்,

வழுவூர் வீரட்டம், விற்குடி வீரட்டம் என்னும் வீரட்டங்களும், நள்ளாறு, கோட்டாறு, இடையாறு, நாலாறு, ஐயாறு, தெள்ளாறு முதலிய ஆறுகளும்; இடைக்குளம், கடிக்குளம், வளைகுளம், தளிக்குளம், திருக்குளம், பெருங்குளம், அரன்குளம், பாற்குளம் முதலிய குளங்களும், அஞ்சைக்களம், நெடுங்களம், வேட்களம் முதலிய களங்களும்; ஆப்பாடி, எதிர்கொள்பாடி, குருபாடி, மழபாடி முதலிய பாடிகளும்; அரத்துவாரம் பாதாளம், பாம்புணி பாதாளம், பள்ளிமேடு பாதாளம் என்னும் பாழிகளும்; அவந்தி மாகாளம், இரும்பைமாகாளம், அம்பர் மாகாளம், தலைஞாயிறு மாகாளம், உஞ்சேனைமாகாளம் என்னும் மாகாளங்களும்; கடவூர் மயானம், காஞ்சிமயானம், காழிமயானம், நாலூர்மயானம், வீழிமயானம் என்னும் மயானங்களும்; குரக்குக்கா, கோடிகா, கோட்டுக்கா, கோலக்கா, நெல்லிக்கா முதலிய காவுகளும்; கழுக்குன்றம் உருத்திரகோடி, காஞ்சிஉருத்திரகோடி, கடம்பூர் உருத்திரகோடி, ஆரூர் உருத்திரகோடி, மட்டியூர் உருத்திரகோடி முதலிய உருத்திரகோடிகளும்; கடைமுடி, கொடிமுடி, சடைமுடி முதலிய முடிகளும்; ஆரூர் (பரவையுண்) மண்தளி, குரக்குத்தளி, காஞ்சி ஓணகாந்தன்றளி, காஞ்சிமேற்றளி, பழையாறுமேற்றளி, முதலிய தளிகளும்; இறையான்சேரி, தெளிச்சேரி, பெருஞ்சேரி, மணஞ்சேரி முதலிய சேரிகளும்; ஆரூர் அரநெறி, சேறைசெந்நெறி முதலிய நெறிகளும்; தில்லைப்பதி மதிமுத்தம், பழையாறு சத்திமுத்தம் முதலிய முத்தங்களும்; உத்தரகோசமங்கை, சாத்தமங்கை, விசயமங்கை, குலமங்கை, சீயமங்கலம், பெருமங்கலம், திருமங்கலம் முதலிய மங்கலங்களும்; துருத்தி, பூந்துருத்தி முதலிய துருத்திகளும்; தினைநகர், விழல்நகர் முதலிய நகர்களும்; சிவபுரம், பிரமபுரம், தாரகாபுரம், சிருங்கபுரம், விக்கிரமசிங்கபுரம், மாதானபுரம், விடையபுரம், கரபுரம், சோபுரம், விசயபுரம், தருமபுரம், விராடபுரம், வாலிகண்டபுரம் வலம்புரம், கன்னபுரம், பஞ்சார்க்கபுரம், திரியம்பகபுரம், சிவாயபுரம், காங்கேயபுரம், சோமேச்சுரபுரம் முதலிய புரங்களும்; தில்லைமூலத்தானம், ஆரூர்மூலத்தானம், அம்பாள்சமுத்திரமூலத்தானம், திருமூலத்தானம் முதலிய மூலத்தானங்களும்;

அச்சிறுபாக்கம், வெண்பாக்கம், மாடன்பாக்கம் முதலிய பாக்கங்களும்; திருமுட்டம், குரங்கணின்முட்டம், முதலிய முட்டங்களும்; அரிச்சந்திரம், புரிச்சந்திரம் முதலிய சந்திரங்களும்; வடகோகரணம், தென்கோகரணம் முதலிய கோகரணங்களும்; நாகபட்டினம்காயாரோகணம், கும்பகோணம் காயாரோகணம், காஞ்சி காயாரோகணம் முதலிய காயாரோகணங்களும்; வெஞ்சமாக்கூடல், அரிஅரன்கூடல், பவானிகூடல், நஞ்சுண்டகூடல் முதலிய கூடல்களும்; கயிலை, மேரு, உதயம், அத்தம், வேதம், சையம், மகேந்திரம், கந்தமாதனம், கேதாரம், ஏமகூடம், விந்தம், சைலம், நீலம், காளத்தி, அருணை, வாட்போக்கி, ஈங்கோய், பொதியம், திரிகூடம், கோணம், கழுக்குன்றம், முதுகுன்றம், பரங்குன்றம், கொடுங்குன்றம், செங்குன்றம், வெண்குன்றம், நெடுங்குன்றம் முதலிய மலைகளும்; அளப்பூர், பேராவூர், நல்லாற்றூர், சேற்றூர், நாறையூர், உறையூர், ஒத்தூர், ஊற்றத்தூர், ஓமாப்புலியூர், ஒற்றியூர், துறையூர், துவையூர், துடையூர், தெங்கூர், முழையூர், பிடவூர், கோட்டூர், கீழ்க்கோட்டூர், இடைமருதூர், ஏமப்பேறூர், தக்களூர், கொள்ளம்பூதூர், கானூர், ஏமநல்லூர், இலம்பையங்கோட்டூர், புடைமருதூர், கரிவரநல்லூர், திருவில்லிப்புத்தூர், கொடுங்கோளூர், குன்றியூர், நின்றியூர் நீடூர், எழுமூர், ஏழூர், எறும்பியூர், வாள்கொளிபுத்தூர், பெரும்புலியூர், வேங்கூர், வியலூர், பனங்காட்டூர், மிழைச்சூர், வைகாவூர், வெற்றியூர், கஞ்சனூர், கஞ்சாறூர், தேவூர், கூந்தலூர், கூழையூர், கூகையூர் ஆற்றூர், வாசவனூர், குளம்பூர், ஆமாத்தூர், கருகாவூர், கன்றுப்பூர், ஆப்பனூர், புகலூர், புன்கூர், பொய்கைநல்லூர், வாய்மூர், கூளூர், மாட்டூர், வாதவூர், காட்டூர், போற்றூர், பூழியூர், பாசூர், நாங்கூர், தேங்கூர், தாழையூர், தகட்டூர், மூலனூர், நாலனூர், தென்னூர், என்னூர், தேவனூர், பொன்னூர், ஆழியூர், வடகஞ்சனூர், விளத்தூர், பூவனூர், குண்டையூர், அவளிவணல்லூர், சேனூர், கோவந்தபுத்தூர், கொட்டையூர், செருவிலிபுத்தூர், எயினனூர், கலயநல்லூர், பந்தணைநல்லூர், மூவலூர், அன்னியூர், கானாட்டு முள்ளூர், புள்ளிருக்குவேளூர், கலிக்காமூர், எருக்கத்தம்புலியூர், கூடலையாற்றூர், நாவலூர்,

ஆமூர், வடுகூர், வடபேறூர், அன்றியூர், அறையணிநல்லூர்,
குன்றத்தூர், வான்மியூர், மயிலாப்பூர், நின்றவூர், அரணநல்
லூர், தலையூர், தேனூர், கடுவாய்க்கரைப்புத்தூர், ஓரியூர்,
கண்ணனூர், திங்களூர், பயற்றூர், தேரூர், வரிஞ்சியூர், வன்னி
யூர், சாய்க்களூர், இருப்பையூர், பெருமூர், திருமானூர்,
பூவாளூர், கருப்பறவூர், கருவூர், புக்கொளியூர், கொடும்பாளூர்
முதலிய வூர்களும்; அனேக தங்காவதம், காஞ்சியனேக தங்கா
வதம் முதலிய காவதங்களும்; இன்னம்பர், புறம்பயம், தண்டங்
குறை, இரும்புதல், களாவுடையார், வெண்ணி, இரும்பூளை,
ஆவணம், ஓகைப்பேரெயில், ஆரூர் பெரியமடம், ஆரூர் சோம
நாதன்மடம், விளமர், மாகறல், வன்பார்த்தான், மாற்பேறு,
விற்கோலம், தக்கோலம், வக்கரை, பெரும்பேறு, நெல்வெண்
ணெய், மாணிகுழி, பூவணம், கானப்பேர், ஆடானை, குருக்கேத்
திரம், வாரணாசி, காரிகரை, கள்ளில், வலிதாயம், குசலபுரி,
காஞ்சியேகம்பம், காஞ்சிகாமகோட்டம், வாஞ்சியம், பெரு
மிழலை, பனந்தாள், கழிப்பாலை, நல்லூர்ப்பெருமணம், மயிலார்,
காவிரிப்பூம்புகார்ப் பட்டினம், கருவிலிகோத்திட்டை, ஏடகம்,
திரிபுராந்தகம், இலஞ்சி, அறைப்பூண்டி, முருகன்பூண்டி,
வலஞ்சுழி, களர், சிற்றேமம், பாச்சிலாச்சிராமம், சுழியல்,
இடும்பாவனம், நெற்குன்றம், நற்குன்றம், கன்னியாகுமரி,
தென்கோடி, கோடிக்குழகு, பிரம்பில், கண்டதேவி, பரிதிநிய
மம், பாம்பணி, சேறை, சித்தவடம், செம்பியமாதேவி, நெய்த்
தானம், உசாத்தானம், நல்லம், வல்லம், திருவேட்டி, பேரூரான்
பட்டி, விளத்தொட்டி, குறட்டி, அரசிலி, கோளிலி, நெல்வேலி,
பைஞ்ஞீலி, சிக்காலி, வெள்ளிகரம், கரவீரம், மயூராந்தகம்,
சுசேந்திரம், பாய்ஞாலம், கிழையம், பேரளம், எச்சிலிளமர்,
மாநிதி, தென்னூர், இடைத்தானம், எணூர்சோலை, மாநிருபம்,
கொண்டல், சத்தியகிரி, காம்பீலி, குடுமிமலை, எரிடவை,
கோடைத்திரைலோக்கி, கைச்சினம், வீரபோகம், கீழையிலான்,
சிவகாசி, தென்காசி, சங்காணி, செப்பறை முதலிய தலங்களும்
அகத்திய முனிவரால் பூசிக்கப்பெற்ற பாக்கம், ஒற்றியூர்,
புரிசை, உளுந்தூர், தாண்டவன் தோட்டம், முனியூர், பிழிகு[illegible]
மணற்கால், கோமலம், வடசிக்கல், நெடுங்காடு, நாகபட்டினம்,

விடங்களூர், திருப்பூண்டி, பழையங்குடி, நியமநல்லூர், திருமுக்கூடல், பட்டாலியூர், சுனை, முத்தலபுரம், மங்கைபுரம், அகத்தீச்சுரம், திருமலை, சலாபம் முதலிய அகத்தீச்சுரங்களும்; அக்கினியால் பூசிக்கப்பெற்ற குளத்தூர், பாண்டூர், நல்லாடை, வயலூர், நெருவூர், இராசவல்லபுரம், சாத்தனூர், ஆள்வார் குறிச்சி முதலிய அக்கீச்சுரங்களும்; சூரியனால் பூசிக்கப்பெற்ற சூரக்குடி, சூரார்க்கருளூர், வாரங்கல் முதலிய ஆதித்தேச்சுரங்களும்; கொங்கணரால் பூசிக்கப்பெற்ற மாற்றூர், தஞ்சாவூர், கொத்தனூர், முதலிய கொங்கணேச்சுரங்களும்; இராமரால் பூசிக்கப்பெற்ற சேதிராமேச்சுரம், பணகுடி யிராமேச்சுரம், கயத்தாறிராமேச்சுரம், திருவிராமேச்சுரம், எதார்த்திருவிராமேச்சுரம், நூற்றெட்டு சிவலிங்கம் முதலிய இராமேச்சுரங்களும்; ஆதிசேடனால் சிவராத்திரியில் நான்கு யாமத்துக்கு முறையே பூசிக்கப்பெற்ற கும்பகோணம் கீழ்க்கோட்டம், திருநாகேச்சுரம், பாம்புரம், நாகூர் என்னுந்தலங்களும்; ஆதிசேடன் முதலிய எட்டு நாகங்களால் பூசிக்கப்பெற்ற நாகபட்டினம் நாகேச்சுரம், நறுவிழிகளப்பாள் நாகேச்சுரம், நெடுங்குடி நாகேச்சுரம், பேரையூர் நாகேச்சுரம், மேலை நாகபட்டினம் நாகேச்சுரம், விசயமங்கலம் நாகேச்சுரம், நான்கூனேரி நாகேச்சுரம், மருதூர் நாகேச்சுரம், சீழை நாகேச்சுரம், காமதவல்லி, கார்க்கோடகேச்சுரம், தில்லை அனந்தேச்சுரம், காங்கேயம் அனந்தேச்சுரம், சங்கர நாராயணர்கோயில் அனந்தேச்சுரம், திருவனந்தேச்சுரம் முதலிய தலங்களும்; வியாக்கிரபாதமுனிவரால் பூசிக்கப்பெற்ற புலிவனம், சிற்றிங்கூர், தில்லைப்பூலீச்சரம், புலிவலம், புலியூர் முதலிய தலங்களும்; அத்திரிமுனிவரால் பூசிக்கப்பெற்ற சிவசைலம் முதலிய அத்தீச்சுரங்களும்; உமாதேவியாரால் பூசிக்கப்பெற்ற சத்தீச்சுரம், வடிவீச்சுரம், கௌரீச்சுரம் முதலிய தேவீச்சுரங்களும்; வசிட்டரால் பூசிக்கப்பெற்ற வசிட்டதுறை, திருமையில், வேப்பூர் முதலிய வசிட்டேச்சுரங்களும்; வாலியால் பூசிக்கப்பெற்ற திருவாலீச்சுரம், அயிலூர் வாலீச்சுரம், சேவூர் வாலீச்சுரம் முதலிய வாலீச்சுரங்களும்; பிரமதேவரால் பூசிக்கப்பெற்ற பிரமதேயம் முதலிய அயனீச்சுரங்களும்; பழையாறு

பட்டீச்சுரம், இராப்பட்டீச்சுரம் முதலிய பட்டீச்சுரங்களும்; சித்தர்களால் பூசிக்கப்பெற்ற, நறையூர் சித்தீச்சுரம், ஆரூர் சித்தீச்சுரம், தோழூர் சித்தீச்சுரம் முதலிய சித்தீச்சுரங்களும்; நந்திதேவரால் பூசிக்கப்பெற்ற, நாகபட்டினம் நந்தீச்சுரம், இராமநந்தீச்சுரம் முதலிய நந்தீச்சுரங்களும்; இலக்குமியால் பூசிக்கப்பெற்ற ஆரூர் ஆடகேச்சுரம் முதலிய ஆடகேச்சுரங்களும்; கொண்டீச்சுரம் திண்டீச்சரம், முண்டீச்சுரம், வெகுளீச்சுரம், நாகளேச்சுரம், கும்பேச்சுரம், சோமேச்சுரம், வீரட்டகாசேச்சுரம், முத்தீச்சுரம், கச்சபேச்சுரம், கேதீச்சுரம், கணீச்சுரம், இடைச்சுரம், பன்னகாபரணேச்சுரம், அயிண்டீச்சுரம், ஏயீச்சுரம், ஆனந்தேச்சுரம், குலிசேச்சுரம், கணபதீச்சுரம், வடுகேச்சுரம், வர்த்தமானேச்சுரம், பரத்தீச்சுரம், பாலைவனேச்சுரம், மறவனீச்சுரம், கொற்றவாளீச்சுரம், நம்பீச்சுரம் கருணீச்சுரம், மூன்றீச்சுரம், வீரபாண்டீச்சுரம், சேரசோழபாண்டீச்சுரம், தெய்வீச்சுரம், சுந்தரபாண்டீச்சுரம், குலசேகரேச்சுரம், புரவெரீச்சுரம், பூமீச்சுரம், மூன்றுகையீச்சுரம், நிலையுடையபாண்டீச்சுரம், மாநந்தீச்சுரம், முடிகொண்ட பாண்டீச்சுரம், போத்தீச்சுரம், நரசிங்கேச்சுரம், பாகேச்சுரம், விக்கிரமசோழேச்சுரம், விசுவேச்சுரம், அரிகேச்சுரம், பரசுராமேச்சுரம், காணவினியபாண்டீச்சுரம், காந்தீச்சுரம், பாண்டீச்சுரம், இராசேந்திரசோழேச்சுரம், கண்டீச்சுரம் முதலிய சுரங்களும்; காரைக்கால் கயிலாயம், இராசராச சோழேச்சுரம் கயிலாயம், களப்பாள் கயிலாயம், ஒரூர் கயிலாயம், பெருந்துறை கயிலாயம், பெருநூர்கயிலாயம், சிவப்பிரகாசங்கயிலாயம், சேலங்கயிலாயம்; பசுந்தலை கயிலாயம், முரப்புநாடு கயிலாயம், திருவைகுந்தம் கயிலாயம், திருப்பேர் கயிலாயம், சேந்தமங்கலம் கயிலாயம், கங்கைகொண்டசோழபுரம் கயிலாயம், கோடக்ஞார் கயிலாயம், சேரமாதேவி கயிலாயம், பிரமதேயம் கயிலாயம் முதலிய கயிலாயங்களும்; செந்தில், ஆவினன்குடி, சுவாமிமலை, பழமுதிர்சோலை, வேங்கடம், தணிகை, அருக்கொணமலை, வள்ளிமலை, மயிலம், மயூரகிரி, தான்றோன்றி, புகழிமலை, கபிலைமலை, கொங்கணகிரி, தென்சேரிகிரி, குருடிமலை, ஊதிமலை, ஞானமலை, பழநிமலை, விராலிமலை, வள்ளியூர், திருமலை, கதிர்காமம்,

விநாயகமலை, வளநாட்டுமலை, அத்திப்பட்டு, எழுகரைநாடு, அத்திக்கரை, இந்தம்பலம், ஒடுக்கத்துச்செறிவாய், கந்தனூர், கரியவனகர், காமத்தூர், பாகை, பெருங்குடி, முள்வாய், வாகை மாநகர், இராசபுரம், கிரனூர், விடைக்கழி, காவளூர், தச்சூர், வேலூர், உத்தரமேரூர், பேரூர், வயிரவிவனம், சீபுருடமங்கை, ஆய்க்குடி, காஞ்சிகுமரகோட்டம், நாகபட்டினங்குமரகோட்டம் முதலிய தலங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றுள் வேதம், உதயம், அத்தம், மகேந்திரம், வயிரவிவனம், வண்குடி, மாகுடி, நல்லக்குடி, சாலைக்குடி, பெருங்குடி, சடைமுடி, போற்றூர், பூமியூர், துவையூர், தேவனூர், கந்தனூர், காமத்தூர், வேலனூர், திருக்குளம், பாற்குளம், இடைப்பள்ளி, சிறப்பள்ளி, பரப்பள்ளி, அயிண்டீச்சுரம், நாகளேச்சுரம், ஏயீச்சுரம், நாலாறு, ஞாழல்வாயில், மாநிதி, மாநிருபம், தென்னூர், கோட்டுக்கா, இடைத்தானம், ஏனூர்சோலை, கோண்டல், புரிச்சந்திரம், காம்பீலி, ஏரிடவை, எச்சிலிளமர், கிழையம், பாய்ஞாலம், அருக்கோணமலை, விநாயகமலை, வளநாட்டுமலை, ஞானமலை, முள்வாய், ஒடுக்கத்துச்செறிவாய், வாகைமாநகர், கரியவனகர், இந்தம்பலம், பாகை, அத்திக்கரை, இராசபுரம், எழுகரைநாடு, அத்திப்பட்டு, இரண்டுகேளம், கோச்செங்கட் சோழநாயனார் கட்டிய பெருங்கோயில்களில் முப்பதுபெருங்கோயில்கள் இருக்குமிடங்கள் தெரியவில்லை தெரிந்தவர்கள் தெரிவிப்பார்களாக.

திருமறைத்தேவாரத்திருமுறைகளிலும், திருத்தொண்டர்புராணங்களிலும் தில்லை என்பது பெரும்பற்றபுலியூர், புலியூர்ச்சிற்றம்பலம், அம்பலம், பொன்னம்பலம், சிற்றம்பலமெனவும்; சிவபுரிநெல்வாயில் என்பது நெல்வாயில், உச்சியெனவும்; வெள்விடை யென்பது வெள்ளடை யெனவும்; காவிரிப் பூம் புகார்ப்பட்டினம் பல்லவனீச்சுரம் என்பது காவிரிப்பூம்பட்டினம், புகார், புகாரிற்பல்லவனீச்சுரம், பட்டினத்துறை பல்லவனீச்சுரம், பட்டினத்துப் பல்லவனீச்சுரமெனவும்; புகலியென்பது புகலெனவும்; பிரமபுரமென்பது பூமகனூர், அயனூர், கமலத்தோனூரெனவும்; ...தாராய் என்பது தாராய்எனவும்; வேணுபுரம்என்பது வேணு, புத்தேளுக் கிறைவனூர், தேவேந்திரனூர், இந்திரனூர்,

இமையோர் கோனூர், தேவர்கோனூர், புரந்தரனூர், இமையோர்க்கதிபன்சேரூரெனவும், சிரபுரம் என்பது சிலம்பன்சேரூர், சிலம்பனூரெனவும்; குறுமாணிகுடி கண்ணாயிரர் கோயில்என்பது கண்ணார் கோயிலெனவும்; வைகாவூர்யென்பது வைகாஎனவும்; சிறுபழுவூர் ஆலந்துறையென்பது பழுவூரெனவும்; உறையூர் மூக்கீச்சரம் என்பது மூக்கீச்சரம், குக்குடேச்சுரம், உறந்தையெனவும்; தென்களக்குடித்திட்டையென்பது தென்குடித்திட்டையெனவும், அந்தவனல்லூர் ஆலந்துறை என்பது ஆலந்துறையெனவும்; அட்டப்பள்ளிநியமம் என்பது நியமம்எனவும்; பழையாறு சத்திமுத்தம் என்பது சத்திமுத்தமெனவும்; பழையாறு பட்டீச்சுரம் என்பது பழைசைபட்டிசரம், பழையாறைபட்டிசரமெனவும்; பழையாறுவடதளியென்பது பழையாறை வடதளி, ஆறைவடதளி எனவும்; பழையாறுமேற்றளியென்பது ஆறைமேற்றளி யெனவும்; பழையாறுஎன்பது பழையாறை, ஆறையெனவும்; பேரூர்ஆன்பட்டியென்பது ஆன்பட்டியெனவும்; கும்பகோணம்என்பது மாகோணம், குடமூக்கு, குடந்தை யெனவும்; காயாரோகணம்என்பது காரோணமெனவும்; ஆவாடுதுறையென்பது ஆவடுதுறையெனவும்; கோழுந்தூர் என்பது அழுந்தையெனவும்; தலைச்சங்கங்காடென்பது தலைச்சங்கை, தலைசையெனவும்; மிகைச்சூர்என்பது மீயச்சூரெனவும் கருவிலிக்கோத்திட்டை என்பது கருவிலிக்கொட்டிட்டையெனவும்; இராமனந்தீச்சுரம் என்பது இராமனதீச்சரமெனவும்; சாத்தமங்கலம் அயோகந்தியென்பது சாத்தமங்கையயவந்தி, சாந்தை யயவந்தி, அசோகந்தியெனவும்; நாகபட்டினம் என்பது நாகையெனவும்; சிவப்பள்ளிமுக்கூடல் என்பது பள்ளியின்முக்கூடல் எனவும்; சேற்றூர்ச்செந்நெறியென்பது சேறைச்செந்நெறியெனவும்; அரத்துவாரம் என்பது அரதைப்பெரும்பாழி, பெரும்பாழியெனவும்; பாம்புணிப்பாதாளம் என்பது பாதாளேயெனவும்; விடைவாய்க்குடிஎன்பது விடைவாய்எனவும்; காரைவாயில்என்பது காராயிலெனவும்; அகத்தியர்தவப்பள்ளியென்பது அகத்தியான்பள்ளியெனவும்; அதியரையமங்கையென்பது அதிகையெனவும்; காஞ்சியென்பது கச்சி, கச்சியூர் எனவும்; ஏகம்பம்என்பது கம்பம்மெனவும்; தக்கோலம்

ஊறல் என்பது ஊறலெனவும்; பழையனூர்என்பது பழனை யெனவும்; வெண்பாக்கம் உளோம்போகீர் என்பது உளோம் போகீரெனவும்; கடம்பனூர் என்பது கடம்பையெனவும்; கண் ணனூர்என்பது கண்ணையெனவும்; தஞ்சாவூர் என்பது தஞ்சை யெனவும்; பஞ்சாக்கபுரம் என்பது பஞ்சாக்கையெனவும்; சூலமங்கலம்என்பது சூலமங்கையெனவும்; புள்ளமங்கலம்என் பது புளமங்கையெனவும்; வழுவூர்என்பது வழுவையெனவும்; கேதீச்சரம் என்பது கேதிசரமெனவும்; ஏமகூடம்என்பது கூடமெனவும்; வீரபோகம் என்பது போகமெனவும்; மயிலாப் பூர் என்பது மயிலை, மயிலாப்பு எனவும்; கரையூர் பாண்டிக் கொடுமுடி என்பது பாண்டிக்கொடுமுடி, கொடுமுடியெனவும்; பாச்சிலாச்சிராமம் என்பது பாச்சில், ஆச்சிராமம்எனவும்; கழுக்குன்றம்என்பது கழுநீர்க்குன்றமெனவும்; சிராப்பள்ளி என்பது சிரப்பள்ளியெனவும்; காளிலிங்கம் என்பது காளிங்க மெனவும்; பொதியமலைப்பாவநாசம் என்பது பாவநாசம், பொதி யின்மலையெனவும்; உஞ்சேனைமாகாளம் என்பது உஞ்சைமாகாள மெனவும்; பந்தணைநல்லூர் என்பது பந்தணைநல்லூர், பந்தை யூரெனவும்; கச்சியூர் என்பது கச்சையூரெனவும்; நள்ளாறு என்பது நள்ளாறையெனவும்; சிவபுரம் என்பது திருவாதிரை யான் பட்டினமெனவும்; குற்றாலம் என்பது குறும்பலாஎனவும் கோவலூர் என்பது கோவனகரெனவும்; திருத்தியுத்தரவேதீச் சுரம் என்பது வேதீச்சுரமெனவும்; அக்கினீச்சுரம் என்பது அக்கீச்சுரமெனவும்; அத்திரீச்சுரம் என்பது அத்தீச்சுரமென வும்; அண்ணுமலையென்பது அண்ணுவெனவும்; கஞ்சாறூர் என்பது கஞ்சாறு எனவும்; கடம்பூர் என்பது கடம்பையென வும்; வாட்போக்கியென்பது மாணிக்கவெற்பு எனவும்; தாண்ட வன் தோட்டம் என்பது தண்டந்தோட்டமெனவும்; சாய்க்க ஞர் என்பது சாக்கையெனவும்; அரிச்சந்திரபுரம் என்பது அரிச்சந்திரமெனவும்; சோமேச்சுரபுரம் என்பது சோமேச்சுர மெனவும்; மதுரையென்பது கூடல், ஆலவாயில், பூழியூர், மணிக்கோயில் எனவும்; கயிலாயம் என்பது நொடித்தான்மலை யெனவும்; பெருமணநல்லூர் என்பது நல்லூர்ப்பெருமண மெனவும்; வந்திருக்கின்றன. திருவிசைப்பாவில் ஆவாடுதுறை

யென்பது சாந்தையூர் ஆவடுதுறையெனவும்; களப்பாளென்பது களந்தையெனவும்; திரைலோக்கியென்பது கோடைத் திரைலோக்கியெனவும்; சாட்டியக்குடியென்பது சாட்டியக்குடியேழிருக்கையெனவும் வந்திருக்கின்றன. (கோடையென்பது இன்னதென்றும், ஏழிருக்கையென்பது இன்னதென்றும் புலப்படவில்லை.)

திருமறைத்தேவாரத்திருமுறைத்தலங்களில் தலம், கோவில், சுவாமி, தேவிகளுக்குத் தனித்தனிப்பெயருண்டு. சிலதலங்களில் தலப்பெயரே சுவாமிபெயராகவும், சிலதலங்களில் கோயிற்பெயரே சுவாமிபெயராகவுமிருக்கும். ஒரேபெயருடைய பலதலங்களும், பலகோயில்களும், பலசிவலிங்கத்திருவுருவங்களுமுண்டு. சிலதலங்கள் தலப்பெயர் சுவாமிபெயர்களையும், சிலதலங்கள் கோவிற்பெயர் சுவாமிபெயர்களையும், சிலதலங்கள் தலப்பெயர் கோயிற்பெயர்களையும், சிலதலங்கள் தலப்பெயரையும், சிலதலங்கள் கோவிற்பெயரையும், சிலதலங்கள் சுவாமிபெயரையுங்கொண்டு இடைக்குறை, கடைக்குறை, மரூஉமொழி தோன்றல், திரிதல் என்னும் விகாரங்களைப்பெற்றிருக்கின்றன. அச்சேற்றிய திருமுறைகளில் வாள்கொளிபுத்தூர் வாழ்கொளிபுத்தூரெனவும், விழனகர் விளனகரெனவும், சத்திமுத்தம் சத்திமுற்றமெனவும், மூலத்தானம் மூலட்டானமெனவும், கரையூர் கறையூரெனவும், கருமாறி கருமாரியெனவும், சோமேச்சரம் சோமீச்சரமெனவும், பாதாளேச்சரம் பாதாளீச்சரமெனவும், வர்த்தமானேச்சரம் வர்த்தமானீச்சரமெனவும், தலைச்சங்கங்காடு தலைச்சங்காடெனவும், திருத்தேவன்குடி திருந்துதேவன்குடியெனவும், அரிசிற்பெருந்துறை பேணுபெருந்துறையெனவும், செருவிலிப்புத்தூர் அரிசிற்கரைப்புத்தூரெனவும், களாக்காரை களர்க்காரையெனவும், கங்கைகொண்டசோழேச்சரம் கங்கைகொண்டசோளேச்சரமெனவும் இவைபோன்ற அனேகமாறுதல்களிருக்கின்றன. இவையாவுங் கல்வெட்டைக்கொண்டும், கர்ணபரம்பரைக்கதைகளைக்கொண்டும் கோவிலில் உள்ள திருவுருவங்களைக்கொண்டுங் கண்டுபிடிக்கப்பட்டன. திருநாவுக்கரசுநாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருமறைத்

தேவாரத்திருப்பதிகத் திருப்பாடல்கள் பெறாத சிவதலங்கள் இல்லையென்பதற்குவேண்டிய ஆதாரங்கள் அவர் அருளிச்செய்த திருமுறைத் தேவாரத்திருப்பதிகத் திருப்பாடல்களில் மறையாதிருக்கும் அடங்கன் முறைத்திருப்பாடல்களில்இருக்கின்றன அந்நாயனார் புராணத்தில் அவர்சென்ற மார்க்கங்கள்முற்றுஞ் சொல்லப்படவில்லை. சிறிது பாகமாத்திரஞ்சொல்லப்பட்டிருக்கிறது. அந்நாயனார் திருமறைக்காட்டிலிருந்து நடுராத்திரியில் அவருக்கு சொப்பனத்தில் தோன்றி வாய்மூருக்கு வாவென்றழைத்த பரமசிவன்சென்ற திருக்குறிப்பின் வழியே அவர் பின்னே சென்றபோது வழியில் பரமசிவன் மறைந்தருளிய (சேகல் என்று வழங்கும்) திருக்குறிப்புச்செல்கல் என்னும் அளப்பூரைச்சுட்டி அந்நாயனார் புராணங்கூறவில்லை. இவ்வாறே அந்நாயனார் புராணத்திற்பெரும் பாகமும் திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் புராணத்திற் சிலபாகமும், சுந்தரமூர்த்திநாயனார் (ஏயர்கோன் கலிக்காமநாயனார்) புராணத்திற் சிலபாகமும் விறன்மிண்டநாயனார் புராணத்திற் பெரும்பாகமும், அரிவாட்டாயநாயனார் புராணத்திற் சிலபாகமும், திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் புராணத்திற் சிலபாகமும் விட்டுப்போய்விட்டன. சுமார் முந்நூறு வருடங்களுக்குமுன் விசேடமாகச்சாலைகள் இல்லாத காலத்தில் கால்நடையாக யாத்திரைசெய்து அடங்கன் முறையில் சொல்லப்படும் இருநூற்று எழுபத்திநான்கு சிவதலங்களையுங்கண்டு பிடித்த திருவண்ணாமலை அண்ணாமலை தேசிகர் எழுதிய சிவட்சேத்திர விளக்கம் என்னும் புத்தகத்தில் திருவெண்ணெய் நல்லூருக்கு கிழக்கு ௩-மைல் தூரத்தில் கிராமம் என்று வழங்கும் திருமுண்டீச்சுரத்துக்குப்பதிலாக நெல்லிக்குப்பம் இரயில் மார்க்கத்தில் திருவதிக்கைக்குக் கிழக்கில் (திருக்கண்டீச்சுரமென்று வழங்கும்) திருக்கணீச்சுரத்தை எழுதியிருக்கின்றார். இவ்வொரு மாறுதலைத்தவிர வேறுமாறுதல்கள் இல்லை. இம்மகானுபாவர் அரிதாக யாத்திரைசெய்து சிவதலங்களைக்கண்டு பிடித்தமை என்றும் மறக்கற்பாலதன்று. சிவதலமஞ்சரி, யாத்திரானுகூலம் என்னும் புத்தகங்களில் திருச்சிற்றேமத்துக்குப்பதிலாக (சித்தாமூர்என்று வழங்கும்) திருத்தோமூர்ச் சித்தீச்சுரத்தையும், திருப்பைஞ்ஞீலிக்குப்

பதிலாக (லாலிகுடி என்று வழங்கும்) திருத்தவத்துறையையும் எழுதியிருக்கின்றார்கள். இன்னும் இவைபோன்ற பற்பல மாறுதல்க ளிருக்கின்றன. அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழ்ப் பாடல்களில் ஆயிரத்து இருநூற்று நாற்பத்தேழு பாடல்கள் கொண்டதாய், இரண்டு பாகமாக வெளிவந்துள்ள புத்தகங்களில், முதலாவது புத்தகத்தில் கபிலைமலை என்பதைப் பசுமலையெனவும்; இரண்டாவது புத்தகத்தில் திருக்கோவலூர் என்பதை திருக்கோயிலூரெனவும்; திருமயேந்திரப்பள்ளி யென்பதை திருமயேந்திரமெனவும்; திருநாகேச்சுரம் என்பதைத் திருநாகீச்சுரமெனவும் எழுதப்பட்டிருக்கின்றன.

திருக்கோயில்களில் முற்காலங்களில் கல்லிலும், செப்பிலும் சாதனம் எழுதும் வழக்கமிருந்தன. அச்சாதனங்களில் அரசன்பெயர், அவ்வரசன் பட்டத்துக்கு வந்தபின் எத்தனையாவது வருடத்தில் சாதனம் எழுதப்பட்டதோ அந்தவருடம், மாசம், பக்கம், திதி, வாரம், நட்சத்திரம், தேயம் (நாடு), உள்நாடு, கூற்றம், தலப்பெயர், சுவாமிபெயர், என்பவைகளும்; சாதனம்பண்ணிக்கொடுத்தவனுடைய ஊர், பெயர், என்பவைகளும்; நிலமானால் நான்கெல்லைகட்டி அதன்பெயர், அளவுகளும்; திருவாபரணமானால் அந்த நகையின்பெயர், நிறைகளும்; வேறு தருமமானால் அதன்விபரமும் சந்திர சூரியருள்ளளவுஞ் செல்லவும், அதற்கு விரோதஞ்செய்தவர்கள் கங்கைக்கரையில் பசுவைக்கொன்றவர்கள் அடையுங்கதியை யடையவுங்கடவதென்று எழுதி, எழுதிக்கொடுத்தவன்பெயரும் சாட்சிகளின் பெயரும் போடப்பட்டிருக்கும். சில சாதனங்களில் எந்த அரசன் காலத்தில் எழுதியதோ, அந்த அரசனைப்பற்றிய கட்டுரைகள் வரையப்பட்டிருக்கும். முற்கூறிய கல்வெட்டுச்சாதனம் செப்பேட்டுச்சாதனங்களினால் தலத்தின்பெயரையும், சுவாமியின் பெயரையும் எளிதாக அறியலாகும். அடங்கன் முறையில் சொல்லப்படும் தலங்களைக்கண்டுபிடிப்பதற்கு கல்வெட்டுச் சாதனங்கள் ஏற்ற கருவிகளாயிருக்கின்றன, இதனை யறியாத சிலர் சிலகோவில்களைத் திருப்பணி செய்ய வேண்டியதற்காகச் சில சாதனங்களைப் பிரித்துவிட்டார்கள்.

தலத்தின் பெயரும், சுவாமியம்மன்பெயர்களும் முற்கால வழக்கம்போல் வழங்காமல் தற்காலம் வேறுபட்டு வழங்கலால் தலப்பெயரையும், சுவாமி பெயரையும் கல்வெட்டின் உதவி யில்லாமல் கண்டு பிடிக்க முடியவில்லை. கல் வெட்டுகளில் சொல்லப்படும் மாசம், பக்கம், திதி, வாரம், நட்சத்திரம் என்பவைகள் பற்பல சமயங்களில் ஒன்று கூடும் என்பதை அறியாமலும், ஒரே பெயருடைய பல அரசர்களிருந்தார்க ளென்பதை யுணராமலும், சமயாசிரியர்கள் காலத்தை சமீபகாலம் போல எழுதி யிருக்கிறார்கள். சமீப காலத்தில், சமயாசிரியர்களின் தெய்வத் தன்மை விளங்கிற் றென்பது நம்முடைய சைவசமயத்துக்கும், தமிழ்ப்பாடைக்கும் பேருயர் வைத் தரக்கூடியதானாலும், காலமல்லாத காலமான தால் அது ஒப்பத்தகுந்ததன்று. கல்வெட்டுச்சாதனம் எழுதும் வழக்கம் இக்காலத்தில் நிறுத்தப்பட்டிருக்கிறது.

தலப்பெயர், சுவாமி பெயர், தருமஞ்செய்தவர் பெயர் நீண்டகால மிருத்தலினாலும்; "நல்லாரொருவர்க்குச் செய்த வுபகாரங், — கன்மே லெழுத்துப்போற் காணுமே," என ஔவைப் பிராட்டியார் கூறியிருத்தலினாலும் சிலாசாதனம் அவசியமேயாகும்.

தற்காலவழக்கம்போல் கலிவருடம் இத்தனைமேற் செல்லா நின்ற இன்னவருடம், இன்னமாசம், இன்னதேதி, இன்ன பக்கம், இன்னவாரம், இன்னதிதி, இன்னநட்சத்திரம் கூடியசுப தினத்தில் இன்ன தலத்தில் திருக்கோயில்கொண்டு விளங்கும் இன்னதேவியார் சமேதராகிய இன்ன சுவாமிக்கு இன்ன வூரிலிருக்கும் இன்னார் குமாரன் இன்னான் இன்னதருமஞ் செய்வித்தேனென்று எழுதலாம். இங்ஙனஞ் செய்வது பெரும் புகழாகும். அன்றியும் ஒவ்வொரு தலத்துக்குமுள்ள திரு மறைத் தேவாரத் திருமுறைப் பதிகங்களை அவ்வத்தலங்களில் கல்லிலாவது அல்லது செம்பிலாவது வரைந்துவைப்பது மிக்க விசேடமே யாகும்.

## திருவிடைவாய்க்குடி.

இது திருவாரூர் நீடாமங்கலம் இரயில் மார்க்கத்தில் கொரடாச் சேரிக்குத் தென்கிழக்கு ஒன்றரைமைல் தூரத்தில் பாண்டவாய் நதியின் தென்கரையில் திருவிடைவாசல் என்று வழங்குகிறது. இத்தலத்தில் காடு மூடப்பெற்று வெடித்துச் சரிந்து விழுந்துகொண் டிருக்குந் திருக்கோவிலின் அர்த்த மண்டபம் தென்புறத்திலும், மகாமண்டபம் மேல்புறத்திலும் கல்லில் வெட்டியுள்ளது

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

### தேவாரம்

*மறியார் கரத்தெந்தை யம்மா னுமையொடும்*
*பிரியாத பெம்மா னுறையு மிடமென்பர்*
*பொறிவாய் வரிவண்டு தன்பூம் பெடைபுல்கி*
*வெறியார் மலரிற் றுயிலும் விடைவாயே.* (௧)

*ஒவ்வாத வென்பே யிழையா வொளிமௌலிச்*
*செவ்வான் மதிவைத் தவர்சே ரிடமென்பர்*
*எவ்வாயிலு மேடலர் கோடலம் போது*
*வெவ்வா யரவம் மலரும் விடைவாயே.* (௨)

*கரையார் கடனஞ் சமுதுண் டவர்கங்கைத்*
*திரையார் சடைத்தீ வண்ணர்சே ரிடமென்பர்*
*குரையார் மணியுங் குளிர்சந் தமுங்கொண்டு*
*விரைவாய் புனல்வந் திழியும் விடைவாயே.* (௩)

*கூசத் தழல்போல் விழியா வருகூற்றைப்*
*பாசத் தொடும்வீழ வுதைத்தவர் பற்றாம*
*வாசக் கதிர்ச்சாலி வெண்சா மரையேபோல்*
*வீசக் களியன்ன மல்கும் விடைவாயே.* (௪)

*திரியும்பு ரமூன்றையுஞ் செந்தழ லுண்ண*
*வெரியம்பெய்த குன்ற வில்லி யிடமென்பர்*
*கிரியுந்தரு மாளிகைச் சூளிகை தன்மேல்*
*விரியுங் கொடிவான் விளிசெய் விடைவாயே.* (௫)

*இள்ளை மொழியாளைக் கெழுவ வாழ்த்தி*
*கொள்ளைத் தலை தக்கனைக் கொண்டவர்*
*மள்ளல் நெருங்கு மழலைச் செய்வாய்*
*வெள்ளை நகையார் விளிசெய் விடைவாயே.* (௬)

*பாதத் தொலியா ரிடம்பாட நடஞ்செய்*
*நாதத் தொலியர் மகிழும் மிடமென்பர்*
*கீதத் தொலியுங் கெழுமும் முழவொடு*
*வேதத் தொலியும் பயிலும் விடைவாயே.* (௭)

*எண்ணாத வரக்க னுரத்தை நெரித்துப்*
*பண்ணார் தருபாட லுகந்தவர் பற்றாம*
*கண்ணார் விழவிற் சடிவீதிக டோறும்*
*விண்ணோர் களும்வந் திறைஞ்சும் விடைவாயே.* (௮)

*புள்வாய் பிளந்தா னயன்பூ முடிபாதம்*
*ஒள்வா னிலந்தேடு மொருவர்க் கிடமாந்*
*தெள்வார் புனற்செங் கழுநீர் முகைதன்னில்*
*விள்வாய் நறவுண்டு வண்டார் விடைவாயே.* (௯)

*உடையே துமிலார் துவராடை யுடுப்போர்*
*கிடையா நெறியான் கெழுமும் மிடமென்பர்*
*அடையார் புரம்வேவ மூவர்க் கருள்செய்த*
*விடையார் கொடியா னழகார் விடைவாயே.* (௰)

*ஆறும் மதியும் பொதிவே ணியனூர்*
*மாறில் பெருஞ் செல்வமலி விடைவாயை*
*நாறும் பொழிற் காழியார் ஞானசம்பந்தன்*
*கூறுந் தமிழ் வல்லவர் குற்றமற்றோரே.* (௧௧)

(இத்தேவாரத்திருப்பதிகம் மறைந்துபோன பதிகங்களிலொன்றாகியது. திருநாரையூர் பொல்லாப்பிள்ளையார் மாணாக்கராகிய நம்பியாண்டார் நம்பி யென்பவர் அடங்கன்முறைத் தேவாரத்திருப்பதிகங்களை கண்டுபிடிப்பதற்கு முன்னரே கல்லில் வெட்டப்பட்டது. இதற்குப்பண்ணடைவு அமைத்து அடங்கன்முறையிற் சேர்ப்பது பெரும் புண்ணியமாகும்.)

4375



இத்தலம்—பாண்டவாய்நதி, ஆதிசேடதீர்த்தம், அத்திரி தீர்த்தம், அகத்தியதீர்த்தம் முதலிய தீர்த்தங்களையுடையது. இடபதேவர், ஆதிசேடன், அத்திரிமுனிவர், அகத்தியமுனிவர் முதலியோர் பூசித்தது. அறுபத்துமூன்று நாயன்மார்களி லொருவராகிய, ஐயடிகள் காடவர்கோனுயனார் திருப்பணி செய்து பின்வரும் திருவெண்பா பாடப்பெற்றது.

திருவெண்பா.

மாண்டவா யங்காவா முன்னை மடநெஞ்சே
வேண்டவா யாகில் விரைந்தொல்லைப்—பாண்டவாய்த்
தென்னிடை வாய்மேய சிவனார் திருநாம
மின்னிடைவாய் வைத்து நினை.

திருநாவுக்கரசு நாயனார் அருளிச்செய்த அடைவு திருத் தாண்டகம் மூன்றும் பாடலில் "விடைவாய்க்குடி" என்று கூறியருளப்பெற்றது. சுவாமி, தேவியார், கணபதி, தாண்டவ கணபதி, சுப்பிரமணியர், வைரவர், சூரியன், ஆதிசேடன், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் இத்திருவுருவங்களை மாத்திர முடையது. சுவாமிபெயர்—புண்ணியகோடிநாதர். தேவியார் பெயர்—அபிராமியம்மை.

குறிப்பு:-கோரடாச்சேரியிலிறங்கி, தெற்கே கூத்தாநல்லூருக்குப் போகுஞ் சாலையில் ஒரு மைல் தூரஞ்சென்று, பாண்டவாய்நதிப் பாலத்தைக்கடந்து. அந்நதியின் தென்கரையோடு சேர்ந்து சாலையை விட்டு வண்டிப்பாதையில் கிழக்கே அரை மைல் தூரஞ்சென்று பாலாகுடியைக்கடந்தால் (திருவிடைவாசல் என்று வழங்கும்) திரு விடைவாய்க்குடியைச் சேரலாம்

---

திருமுறைகளிலும், திருப்புகழிலும் சொல்லப்படாமல் முற்கூறிய கோவில்களைக் கண்டுபிடிக்கும் பொருட்டு, ஐந்து வருடம் யாத்திரைபோய், ஒவ்வொரு கோவிலிலுமுள்ள திரு வுருவங்கள், கல்வெட்டுகள் முதலியவைகளைப் பார்வையிட்டும், அவ்வூரிலுள்ளவர்கள் சொல்லிய கர்ணபரம்பரைக் கதைகளைக் கேட்டும் ஏழுநூற்றைம்பது கோவில்களும்; கண்டவர்கள் சொல்லியவற்றைக்கேட்டும், முன்னோரெழுதிய நூற்களைப்பார்த்

னும் ஐம்பது கோவில்களும் திருக்கயிலாயமுதல் திருக்கோண மலை வரையில் கண்டுபிடிக்கப்பட்டன. இவ்வெண்ணூறு கோயில்களில் நூற்றுப்பன்னிரண்டு கோவில்கள் திருப்பணி செய்யப்பெற்றும், இருநூற்று எழுபத்து மூன்று கோவில்கள் காடுமூடப்பெற்றும், ஐந்து கோவில்கள் இடமாறுதல்பெற்றும், ஏழு கோவில்கள் மறையப்பெற்றும், மற்றையகோவில்கள் நல்ல நிலைமையுற்று மிருக்கின்றன. இத்திருக்கோயில்களிருக்கின்ற ஒவ்வொரு தலத்துக்கும் போகும் வழி, தலத்தின்பெயர், கோவிலின்பெயர், சுவாமியின் பெயர், தேவியின் பெயர், தீர்த்தங்களின் பெயர், பூசித்தவர்களின் பெயர், கோவிலின் நிலைமை, சிவபெருமான் செய்தருளிய திருவிளையாடல்கள், திருவவதாரஞ்செய்த திருத்தொண்டர்களின் சரித்திரங்கள், சிவபதம் பெற்ற திருத்தொண்டர்களின் சரித்திரங்கள், மூவர்கள் வந்துபோன மார்க்கங்கள், மூவர்கள் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்திருப்பாடல்கள், (மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த) திருவாசகம் திருக்கோவைப்பாடல்கள், (திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், நம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர் என்னும் ஒன்பதின்மர் அருளிச்செய்த) திருவிசைப்பா திருப்பல்லாண்டுப்பாடல்கள், (திருவாலவா யுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர் கோனாயனார், சேரமான் பெருமானாயனார், நக்கீரதேவநாயனார், கல்லாடதேவநாயனார், கபிலதேவநாயனார், பரணதேவநாயனார், இளம்பெருமானடிகள் அதிராவடிகள், பட்டினத்தடிகள், நம்பியாண்டவர் நம்பி இவர்கள் அருளிச்செய்த) நாற்பது பிரபந்தப்பாடல்கள், (அருணகிரி நாதர் அருளிச்செய்த) திருப்புகழ்ப்பாடல்கள், (குமரகுருபர சுவாமிகள், சிவப்பிரகாசசுவாமிகள், குகை நமச்சிவாயசுவாமிகள், குரு நமச்சிவாயசுவாமிகள், நமசிவாயசுவாமிகள், சுப்பிரமணியமுனிவர், வீரபத்திரசுவாமிகள், தொல்காப்பியதேவர், தலைமலைகண்டதேவர், அதிவீர ராமபாண்டியர், அந்தகக்கவி வீரராகவ முதலியார், சைவ-எல்லப்பநாவலர், சின்னதம்பிப் புலவர், படிக்காசுப்புலவர், கந்தசுவாமிப்புலவர், சுவாமிநாத தேசிகர், வைத்தியநாத தேசிகர், மீனாட்சிசுந்தரம் பிள்ளை,

சேறைக்கவிராச பிள்ளை, நாகலிங்க முதலியார், சொக்கலிங்க செட்டியார், அழகுமுத்துப்புலவர், பகழிக்கூத்தர், சரவணப் பெருமாள் கவிராயர், திருச்சிற்றம்பல நாவலர், பானுகவி, சிதம்பரம் பிள்ளை, மாரிமுத்துப் பிள்ளை முதலியோர் இயற்றிய பிரபந்தங்கள்) முதலிய எல்லாவற்றையும் தனித்தனித்திரட்டி திருமுறைகளினும், திருப்புகழினும் இராவணன் கயிலாயமலையைத்தூக்கியதைக் கூறும் (௯௭௭) பாடல்களை கயிலாயத்தினும்; உமாபதி கங்கையைச் சடையிற்கரந்ததைக் கூறும் (௧௦௧௦) பாடல்களை மேருவினும்; சபாநாயகப்பெருமான் காளியோடாடியதைக் கூறும் (௬௭) பாடல்களை பழையனூராலங்காட்டினும்; பரமசிவன் பிரமவிட்டுணுக்கள் அடிமுடி தேடியறியாவண்ணம் அக்கினிசொரூபமாய்த் தோன்றியதைக்கூறும் (௭௫௯) பாடல்களை அண்ணாமலையினும்; சிவபெருமான் சந்திரனைக்கலைகுறையாவண்ணஞ்சடையில் தரித்ததைக் கூறும் (௧௪௨௧) பாடல்களை வக்கரையினும்; சிவபெருமான் முப்புரங்களை நகைத்தெரித்ததைக் கூறும் (௯௫௮) பாடல்களை அதிகையினும்; பரமபதி அந்தகனைச் சூலத்தினால் குத்தித் தூக்கி வதைத்ததைக் கூறும் (௧௯) பாடல்களை கோவலூரினும்; சபாநாயகப்பெருமான் ஆனந்த தாண்டவஞ்செய்ததைக் கூறும் (௪௧) பாடல்களையும், உபமன்னியருக்கு பாற்கடலையழைத்துக் கொடுத்ததைக்கூறும் (௯) பாடல்களையும் தில்லையினும்; உமாபதி உமாதேவியாரோடு வேடவடிவங்கொண்டு பன்றிப்பின் சென்று அருச்சுனனோடு யுத்தஞ் செய்து, அவனுக்குப் பாசுபதம் கொடுத்ததைக் கூறும் (௧௧௯) பாடல்களை வேட்களத்தினும்; வீரபத்திரக் கடவுள் தக்கன் தலையைக்கொய்து அவன்செய்த யாகத்தையழித்ததைக்கூறும் (௧௭௦) பாடல்களை பறியலூரினும்; பரமசிவன் சிவலிங்கபூசை செய்துகொண்டிருந்த மார்க்கண்டேயரை பிடிக்கவந்த இயமனை அவ்விலிங்கத்தினின்றெழுந்தருளி யுதைத்துக் கொன்றதைக் கூறும் (௬௯௧) பாடல்களை கடவூரினும்; சிவபெருமான் கல்லால மரத்தடியில் தெற்கு முகமாய் சித்தராய் எழுந்தருளியிருந்து சனகாதி நால்வருக்கு திருமந்திரோபதேசஞ் செய்ததைக் கூறும் (௧௨௨) பாடல்களையும்; அம்மந்திரோபதேசஞ்செய்த படியே யோகத்திலிருந்தபோது தாமரைமலர் என்னும் பாணம்

போட்ட காமனை எரித்ததைக் கூறும் (௨௫௨) பாடல்களை குறுக்கையிலும்; உமாதேவியார் பருவதராசபுத்திரியாயவதரித்ததைக் கூறும் (௩௩௭) பாடல்களை தென்ஆலங்காட்டிலும்; சிவபெருமான் சலந்தரனைப்பிளந்த சக்கரத்தை கண்ணைப்பிடுங்கி அருச்சித்தல்செய்த விட்டுணுக்குக் கொடுத்ததைக்கூறும் (௯௨) பாடல்களை சக்கரப்பள்ளியிலும்; சபாநாயகப்பெருமான் முயலகன் என்னும் அசுரன் முதுகில் வலப்பாதத்தையூன்றி தாண்டவஞ்செய்ததைக் கூறும் (௮) பாடல்களை தலையாலங்காட்டிலும்; பரமபதி பூமியை வட்டமாகக்கீறி அச்சக்கரத்தினால் சலந்தரனைப்பிளந்ததைக் கூறும் (௩௩) பாடல்களை விற்குடியிலும்; பரமசிவன் சூலதேவரைக்கரத்தில் தரித்துக் கொண்டதைக் கூறும் (௭௪௮) பாடல்களை சூலமங்கலத்திலும்; பரமபதி ஆண்மானையுரித்துத் தரித்துக் கொண்டதைக் கூறும் (௪௭) பாடல்களை கோமல் என்னும் கோமலத்திலும்; சிவபெருமான் யானையையுரித்துப்போர்த்துக்கொண்டு தொண்ணூற்றாறு நாழிகை வீரதாண்டவஞ்செய்ததைக் கூறும் (௪௮௮) பாடல்களை வழுவூரிலும்; சிவபெருமான் புலியையுரித்துத் தரித்துக் கொண்டதைக் கூறும் (௨௧௪) பாடல்களை நல்லாடையிலும்; பரமசிவன் ஆயிரம் பாம்புகளையும் அணிந்து கொண்டதைக் கூறும் (௧0௩௧) பாடல்களை பாம்பணியிலும்; வைரவக்கடவுள் பிரமசிரங்கிள்ளியதைக்கூறும் (௩௯௨) பாடல்களை கண்டியூரிலும்; சிவபெருமான் மழுவை வலக்கரத்தில் பிடித்துக்கொண்டதைக் கூறும் (௩௧௭) பாடல்களை மழுவாடியிலும்; சிவபெருமான் மானை யிடக்கரத்தில் பிடித்துக்கொண்டதைக் கூறும் (௨௨௨) பாடல்களை மானூரிலும்; பரமபதி அக்கினியை யிடக்கரத்தில் ஏந்திக்கொண்டதைக் கூறும் (௧௩௩) பாடல்களை மேலைக்காட்டுப் பள்ளியிலும்; பரமசிவன் சிலந்தியை அரசனாகப்பிறக்க அருள்புரிந்ததைக் கூறும் (௨0) பாடல்களை ஆனைக்காவிலும்; உமாபதியும் உமாதேவியும் ஒன்றாய்த்திருவுருக் கொண்டு விளங்குவதைக் கூறும் (௧௨௩௯) பாடல்களை செங்குன்றாரிலும்; நீலகண்டன் ஆலமுண்டுகண்டத்தில் நிறுத்தியதைக் கூறும் (௧௧௨௭) பாடல்களை நஞ்சுண்ட கூடலிலும்; சங்கரனும் நாராயணனும் ஒன்றாய்த்தோன்றியதைக் கூறும் (௯௮) பாடல்களை சங்கர நாராயணர் கோவிலிலும்;

பரமசிவன் கௌரிக்கு அநுக்கிரகஞ்செய்யும் பொருட்டு விருத்த குமார பாலராய்த் தோன்றியதைக் கூறும் (௧௫) பாடல்களை ஓரியூரிலும்; பரமபதி விசாரசருமருக்கு சண்டேசுர பதங்கொடுத்ததைக்கூறும் (௩௧) பாடல்களை சண்டேசுரநாயனார் புராணத்தோடு ஆப்பாடியிலும்; சுந்தரமூர்த்திநாயனார் சிங்கடியார் வனப்பகையார் என்பவர்களை பெண்களாகக் கொண்டதைக் கூறும் (௧௫) பாடல்களை நாட்டியத்தான்குடியிலும்; திருமூல நாயனார் அருளிச்செய்த திருமந்திரம் (௩000) பாடல்களை ஆவாடுதுறையிலும்; திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சமணர்களை நீரிலும் நெருப்பிலும் வென்று கழுவேற்றியதைக்கூறும் (௪௨) பாடல்களை மதுரையிலும்; சுப்பிரமணியக் கடவுள் குருமூர்த்தியா யெழுந்தருளியிருந்து தகப்பனாகிய பரமசிவனுக்கு பிரணவோபதேசஞ் செய்தருளியதைக் கூறும் (௧0௫) பாடல்களை சுவாமிமலையிலும்; வள்ளிநாயகியார் தினைப்புனங் காத்திருந்ததைக் கூறும் (௧௪௨) பாடல்களை வள்ளிமலையிலும் சேர்த்திருப்பதோடு இக்காலத்தில் திருக்கோயில் திருப்பணி செய்தவர்களின் பெயர்களையும்; திருநந்தனவனம், மடம், பாடசாலை, குருபூசை மடம், சத்திரம் முதலியன அமைத்தவர்களின் பெயர்களையும் அந்தந்தத் தலங்களில் சேர்த்து திருமுறைத் திரட்டு என்று பெயர் கொடுத்து திருக்கோயிற் காண்டம், திருவிளையாடற் காண்டம் என்று இரண்டு காண்டங்களாக தொகுக்கப்பட்டிருக்கின்றன.

மேற்படி இரண்டு காண்டங்களும் இராயல் (பெரிய சயிசு) எட்டுப்பக்கங்கொண்ட ஆயிரம்பாரம் (எண்ணாயிரம் பக்கம்) ஆகும் சிவநேயச்செல்வர்கள் தங்கள் தங்களால் இயன்றவரையில் பொருளுதவி புரிந்து, அச்சியற்றி உலகத்தில் பரவச்செய்து சைவசமயத்தையும் தமிழ்ப்பாஷையையும் நிலை நிறுத்தி அதனால் வரும், பெரும் புண்ணியத்தை எளிதாக அடைவார்களென்பது நிச்சயமே இத்திருமுறைத் திரட்டினால் ஒவ்வொரு தல சம்பந்தமாகவுள்ள எல்லாவற்றையும் ஒரேயிடத்தில் எளிதில் தெரிந்துகொள்ளலாம். திருப்பணி முதலிய சிவதருமங்கள் செய்தவர்களின் பெயர்கள் உலகத்தில் நீடூழிகாலம் நிலைபெற்று நிற்கும் சுபம்' சுபம்!!

(0)